# மரபாளர்

பயணம்: 2 பதிவு: 3

**"ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித்
தாழாது உஞற்று பவர்." (குறள் - 620)**

ஊழ் என்பது வெல்ல முடியாத ஒன்று என்பார்கள். சோர்வில்லாமல் முயற்சி மேற்கொள்பவர்கள் அந்த ஊழையும் தோல்வி அடையச் செய்வார்கள்.

அனைவருக்கும் வணக்கம்,

மரபுசார் வரலாறு மீது ஆர்வமுள்ள வரலாற்று ஆய்வாளர்கள், ஆர்வலர்கள் மற்றும் மாணவர்கள் தங்கள் வரலாற்றுத் தேடலைப் பதிவு செய்யும் களமாக நமது ஹெரிட்டேஜர் இதழ் திகழ்ந்து வந்துள்ளது. மரபாளர் இதழின் நோக்கம் மக்களிடையே உள்ள பண்பாட்டுத் தொடர்புகள், வரலாற்று அடையாளங்கள், சடங்குகள், மரபுசார் அறிவு, பதியப்படாத வரலாற்றுத் தகவல்களைத் திரட்டி அளிப்பதோடு, இலக்கியம் மற்றும் வரலாற்றை மீண்டும் வாசிக்கும் தளமாக இது இருக்க வேண்டும் என்பதே.

இவ்விதழுக்கு ஆய்வாளர்கள், ஆய்வு மாணவர்கள் முதல், ஆர்வலர்கள், மரபுசார் அறிவுடையோர், கல்வியாளர்கள், மாணவர்கள் என பங்களிக்க விருப்பமுள்ளோர், பின் வரும் தலைப்புகளில் தங்களின் கட்டுரைகளைத் தகுந்த மேற்கோள்களுடன் எங்களுக்கு அனுப்பி வைக்கவும்.

1. தொல்லியல்,
2. கல்வெட்டு,
3. மரபு பயணங்கள்,
4. நிகழ்வுகள்,
5. மரபுசார் தொழில்கள்,
6. கலைஞர்கள்,
7. பழைய கட்டுமானங்கள்
8. கோவில்,
9. இலக்கியம்,
10. வரலாற்றில் முக்கியம் வாய்ந்த இடங்கள், மனிதர்கள், நாட்கள்,
11. திணைக் குடிகள்,
12. பழங்கால அரசியல்,
13. பழங்கால வணிகம்,




அட்டைப் படம்: செயற்கை நுண்ணறிவு மூலம் உருவாக்கப்பட்ட, மங்களா எனப்படும், கலிங்க வணிகர்கள் வழிபட்ட கடல் தெய்வம்.

14. சமூக இனக்குழு வரலாறு,
15. நாட்டார் வழக்காற்றியல்,
16. பன்னாட்டு தமிழர் வரலாறு,
17. தென்னக வரலாறு,
18. ஊர் வரலாறு,
19. தொழில் நுட்ப வரலாறு,
20. பழம் பொருட்கள் வரலாறு,
21. பன்னாட்டு வரலாறு,
22. புகைப்படத் தொகுப்பு
23. ஆய்வு நூல் அறிமுகம்
24. சுற்றுலா தளங்கள்

இதழ் ஒவ்வொரு மாதமும் முதல் நாள் வெளிவரும். உங்கள் கட்டுரைகளை ஒவ்வொரு மாதமும் 15 தேதிக்குள் அனுப்பவும்.

நன்றியும் அன்புடன்
இராஜசேகர் பாண்டுரங்கன்
இணையம்: www.heritager.in | கைப்பேசி: +91 9786068908

# மொழிப்போர் தியாகிகள் நினைவு தூண்

A.T மோகன், சேலம்

இன்றைய தலைமுறைக்குத் தெரியாத ஒரு விசயம், *1965* ஜனவரி *25* ஆம் நாள், அப்போதைய சேலத்துடன் இருந்த குமாரபாளையத்தில், இந்தி கட்டாயமாகத் திணிப்பதை எதிர்த்து ஒரு போராட்டம் நிகழ்ந்தது, அப்போது போராட்டக்காரர்களை நோக்கி துப்பாக்கிச் சூடு நடத்தப்பட்டது அதில் முதல் குண்டு பாய்ந்து ஒரு பள்ளி மாணவர் இறந்ததாகவும், அதனைத் தொடர்ந்து நடந்த துப்பாக்கிச் சூட்டில் பலர் (சுமார் நாற்பதுக்கும் மேல்)இறந்ததாகவும் , அரசின் அறிக்கைப்படி *15* நபர்கள் குமாரபாளையத்தில் இறந்ததாகவும் சொல்லப்படுகிறது.

அது என்ன இந்தி திணிப்பை எதிர்த்து இந்தி மறுப்பு போராட்டம், அது ஒரு நீண்ட கால வரலாறு, *1930* ல் இருந்தே துவங்குகிறது. இதைப் பல புத்தகங்கள்






*எழுதப்பட்டு உள்ளது. இந்தி திணிப்புக்கு எதிராகத் தமிழ்நாட்டில் தமிழர்கள் நடத்திய போராட்டம் 1930களில் இருந்து தொடங்குகிறது.*
*1938-ல் முதலாவது இந்தி திணிப்புக்கு எதிராகத் தமிழ்நாட்டில் தமிழர்கள் நடத்திய போராட்டம் 1930களில் இருந்து தொடங்குகிறது. 1938-ல் நடைபெற்ற முதலாவது இந்தி திணிப்புக்கு எதிரான போராட்டத்தில் , நடராஜன்,தாளமுத்து என்ற இரு தமிழர்கள் 1938-ம் ஆண்டு நடந்த முதலாவது இந்தி எதிர்ப்பு போராட்டத்தில் உயிர் நீத்தனர்.*

*இதன்பின்னர் தமிழ்நாட்டில் பல்வேறு கட்டங்களாக இந்தி மொழித் திணிப்புக்கு எதிரான போராட்டங்கள் நடைபெற்றன. இப்போதும் நடைபெற்று வருகின்றன. கடந்த சில வருடங்களுக்கு முன் திமுகவின் தாழையூர் தங்கவேல் என்ற முதியவர் இந்தித் திணிப்புக்கு எதிராகத் தீக்குளித்து உயிர்த்தியாகம் செய்தார். தமிழ்நாட்டில் ஜனவரி 25-ந் தேதி இந்தி திணிப்பு எதிர்ப்பு போராளிகளை நினைவுகூரும் வகையில் மொழிப் போர் தியாகிகள் நாள் கடைப்பிடிக்கப்படுகிறது.*

*இந்தப் போராட்டக் காலத்தில் சிறையில் பிறந்தவர் தான் NVN. சோமு. இதன் பிறகு பல்வேறு கைதுகள் துப்பாக்கிச் சூடுகள் என 94 ஆண்டுக் கால வரலாறு உள்ளது. இந்த உயிர் நீத்தத் தியாகிகள் நினைவாக குமாரபாளையத்தில் ஒரு நினைவுத் தூண் வைக்கப்பட்டு இருப்பது முக்கியமானதாகும்.*

# ‘வேலூர்’ வெற்றி நாணயம்

ஆர்.எஸ். சரவணன், வேலூர்

தமிழகத்தின் தரை கோட்டைகளில் சிறந்ததாகவும் கலைநயத்தோடு, நல்ல பராமரிப்பில் இருப்பது வேலூர் கோட்டை.ஒரே நுழைவாயில் கோட்டை (ஏகமுகதுர்கம்) என்ற அமைப்பில் உள்ள இக்கோட்டை 133 ஏக்கர் பரப்பளவில், சுற்றிலும் 191அடி அகலமும்,29 மேல் ஆழமும் கொண்ட அகழியுடன்,கோட்டை சுற்றுச்சுவர் இரண்டு சுவர் பாதுகாப்புடன், கருங்கற்களால் சுமார் 3 கி.மீ. சுற்றளவில் இக்கோட்டைக் கட்டப்பட்டுள்ளது.



விஜயநகர மன்னர் சதாசிவ தேவராயரின்

ஆட்சிக்காலத்தில், பொ.ஆ.பி.1526-1595 அவரது தளபதியும் வேலூரை பொ.ஆ.பி.1595 வரை அவர் ஆணை கீழ் ஆட்சி புரிந்தவருமான சின்ன பொம்ம நாயக்கர் என்பவரின் மேற்பார்வையில் இக்கோட்டையும் அதில் கலையழகு மிக்க கட்டிடங்கள் கட்டப்பட்டன.சின்ன பொம்ம நாயக்கரின் மகனான லிங்கம நாயக்கர் சுதந்திர ஆட்சியாளராக மாறி விஜயநகர பேரரசை எதிர்த்து கலகம் செய்ததால் பொ.ஆ.பி.1604 ல் லிங்கம நாயக்கர் தோற்கடிக்கப்பட்டு, வேலூர் கோட்டை விஜயநகர மன்னர் இரண்டாம் வேங்கடராயரின் கட்டுப்பாட்டில் வந்தது. 1605 ஆம் ஆண்டிலிருந்து வேலூர் விஜயநகர அரசர்களின் இரண்டாவது இருப்பிடமாக மாறியதை ‘ராமராஜ்யமு’ என்ற நூல் தெரிவிக்கிறது.

அப்போதைய இயேசு சபையினரின் கடிதங்களும் இந்தச் செய்தியை உறுதிப்படுத்துகின்றன. இந்த பேரரசிலும் அரசியல் சூழ்ச்சிகள், வாரிசுப் போட்டிகள், குடும்ப பூசல்கள், முக்கிய அதிகாரிகளிடையே முரண்கள், குழப்பங்கள், உள்ளூர் கலகங்கள், நாயக்கர்களின் சுயநலப் போக்குகள் என பலம் குன்றிப் போன விஜயநகர அரசை பிஜப்பூர் சுல்தான் முகமத் அடில் ஷா தன் பெரும் படைகளுடன் வேலூரைக் கைப்பற்றும் நோக்குடன், அப்போது வேலூரை ஆண்டு வந்த மூன்றாம் சீரங்கனுக்கு எதிராகப் போர் தொடுத்தனர். மதுரை,திருச்சி நாயக்கர்கள் உதவி கிடைக்காததால் போரில் தொடர்ந்து தாக்குப்பிடிக்க முடியாமல் போர்க்களத்திலிருந்து மைசூருக்கு ஓடி ஒளிந்த மூன்றாம் ஸ்ரீரங்கன் அங்கேயே வாழ்ந்து மறைந்தார்.


முகமத் அடில் ஷா



சுமார் 300 ஆண்டுகள் செயல்பட்டு,சீரும் சிறப்புமாக விளங்கி பின்னர் நலிந்து போன விஜயநகரப் பேரரசு வேலூரில் முடிவு பெற்றது. வேலூர் கோட்டை அதன் வரலாற்றில் பல அரச கைதிகளைத் தங்க வைத்துள்ளது. 1799 இல் ஸ்ரீரங்கப்பட்டினத்தின் வீழ்ச்சி மற்றும் திப்புசுல்தானின் மரணத்திற்குப் பிறகு, அவருடைய மகன்கள், மகள்கள், மனைவி மற்றும் தாய் (ஹைதர் அலியின் மனைவி) உட்பட அவரது குடும்பத்தினர் கோட்டையில் தடுத்து வைக்கப்பட்டனர். வேலூர் கோட்டை இலங்கையின் கடைசி மன்னரான ஸ்ரீ விக்ரம ராஜசிங்கனின் (1798-1815) இறுதி இடமாக மாறியது.

மன்னரும் அவரது குடும்பத்தினரும் தனது குடும்பத்துடன் 17 ஆண்டுகள் இந்த கோட்டையில் போர்க் கைதிகளாக வைக்கப்பட்டனர். விஜயநகரப் பேரரசின் கடைசி ராய மன்னர்களுடன் அவரது கல்லறையை கோட்டையில் காணலாம் பிஜாப்பூர் சுல்தான் ஆட்சியில் இந்த வெற்றியைக் கொண்டாடும் விதமாக பீஜப்பூர் சுல்தான் முகமத் அடில் ஷா பொ.ஆ. பி.1647ல் ‘வேலூர்’ என்று பொறிக்கப்பட்ட நாணயம் பெர்சியன் மொழியில் வெளியிட்டுள்ளனர் என்பது பலர் அறியாத வரலாற்று செய்தி.

‘பாசாட்டின்-அல்-சலாட்டின்’ என்ற பெர்ஷியன் வரலாற்று நூலில் அடில் ஷாவிலிருந்து ஔரங்கசீப்பின் போர்களைப் பற்றிய வெற்றி குறிப்புகள் உள்ளது. இந்த அரிய நினைவு நாணயத்தைத் தன்னுடைய சேகரிப்பில் வைத்துள்ள நண்பர் திரு. அப்துல் ரசூல் (மென்பொறியாளர்) மரபாளர் இதழில் வெளியிட முதன் முறையாகத் தன் சேகரிப்பில் இருக்கும் இந்த அரிய நாணயத்தின் படங்கள் மற்றும் இந்த நாணயத்தின் வரலாற்றுச் செய்தியைப் பகிர்ந்தார்.’ இந்தியாவில் இஸ்லாமியர் நாணயங்கள்’ என்ற புத்தகம் எழுதி வரும் இவர் தன் புத்தகத்தில் வெளிவரும் முன் இந்த அரிய நாணயப் படங்களை நம் பார்வைக்கு அளித்துள்ளார்.

‘வேலூர் ‘ என்று ஊர்ப் பெயர் கொண்ட நாணயம் வரலாற்றில் உண்டு என்பதை அனைவரும் சென்றடைய வேண்டும் என்ற பெருந்தன்மையான எண்ணத்துக்கு நன்றிகள் பல! தங்கள் புத்தகம் விரைவில் வெளியாகி மேலும் பல வரலாற்று ஆச்சரியங்களை வெளிக்கொணர நல்வாழ்த்துக்கள்.

# காளிங்கராயன் அணை

## விஷ்ணு ப்ரியா

நீர் மேலாண்மையில் சிறந்து விளங்கிய திரு. காளிங்கராயனவர்கள் 700 ஆண்டுகளுக்கு முன்பே கட்டிய அணை மற்றும் வாய்க்கால் ஆகும்.

காளிங்கராயன் வாய்க்கால் கொங்கு மண்டலத் தலைவராக விளங்கிய காளிங்கராயன் அவர்களால் 1271 ஆம் தொடங்கப்பட்டு 1283 ஆம் ஆண்டு கட்டி முடிக்கப்பட்டது. இவ்வாய்க்காலின் மொத்த நீளம் 90 கிமீ ஆகும். பவானி, காவிரி ஆற்றுடன் கூடுவதற்குச் சற்று முன் அணை கட்டி பவானி ஆற்று நீர் காளிங்கராயன் வாய்க்காலுக்குத் திருப்பி விடப்படுகிறது. காவிரியை ஒட்டியும்,இணையாகவும் மேற்குப் புறத்தில் 90 கி.மீட்டர் பயணித்து நொய்யல் ஆற்றில் ஆவுடையாபாறை என்னும் இடத்தில் இவ்வாய்க்கால் சேர்கிறது. இடையில் மூன்று ஓடைகளைக் கடந்து செல்கிறது.



காலிங்கராயன் வரலாறு

ஈரோடு மாவட்டம், வெள்ளோடு கனகபுரத்தில் கி.பி. 13ம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் நஞ்சையைக் கவுண்டரின் மகனாகத் தோன்றினார். லிங்கையன் என்பது அவரது இயற்பெயராகும்.

கொங்கு மன்னன் வீரபாண்டியனின் படைத்தளபதியாகவும், அமைச்சராகவும் விளங்கியதால் காலிங்கராயன் என்ற பட்டம் வழங்கி கௌரவிக்கப்பட்டார்.

பவானி ஆற்றின் குறுக்கே தடுப்பணை கட்டி காளிங்கராயன்பாளையத்திலிருந்து ஆவுடையார்பாறை வரை சுமார் 56 1/2 மைல் நீளமுள்ள வாய்க்கால் வெட்டி புன்செய் நிலங்களை நன்செய் நிலங்களாக ஆக்கியதோடு அன்றே பவானி ஆற்றை நொய்யல் மற்றும் அமராவதி ஆறுகளோடு இணைத்தவர்.

தடுப்பணைக்குத் தேவையான கற்களை ஊராட்சிக்கோட்டை மலையிலிருந்து எடுத்து வந்து அவற்றை பொது மக்களால் வழங்கப்பட்ட தேய்ந்த கலப்பை கொழுவினால் இணைத்து அணைக்கட்டை கி.பி.







1270ல் தொடங்கி கி.பி. 1282-ல் கட்டி முடித்துள்ளார்.

கி.பி. 1282-ஆம் ஆண்டு தை 5-ம் நாள் தான் உருவாக்கிய அணைக்கட்டையும், வாய்க்காலையும் உலகுக்கு அர்ப்பணித்ததால் அந்தநாள் (தை 5) காலிங்கராயன் தினமாகக் கொண்டாடப்படுகிறது. தான் உருவாக்கிய வாய்க்காலை மக்களுக்கு அர்ப்பணித்துவிட்டு தன் வழியினரை அதனை உபயோகிக்கக் கூடாதென்று கட்டளையிட்டும் தானும் பொள்ளாச்சி அருகிலுள்ள ஜமீன் ஊத்துக்குளி சென்று தங்கினார். தற்போதும் அவருடைய வம்சாவளியினர் அங்கு வளமாக உள்ளார்கள்.

ஈரோடு பகுதியில் காவிரி ஆழமான பள்ளத்தில் பாய்வதால் வேளாண்மைக்குப் பயன்படுவதில்லை. இவ்வாய்க்கால் மூலம் ஈரோடு மாவட்டம் சிறப்பாகப் பயனடைகிறது. இவ்வாய்க்கால் தொடங்குமிடத்தில் இதன் சராசரி கடல் மட்ட உயரம் 534 அடியாகும், முடியுமிடத்தில் இதன் சராசரி கடல் மட்ட உயரம் 412 அடியாகும். இதன் மூலம் 15,743 ஏக்கர் நிலம் பாசன வசதி பெறுகிறது. இவ்வாய்க்கால் தொடங்குமிடத்திலிருந்து முடியுமிடம் வரையில் சுமார் 60 கிலோ மீட்டர்கள் தானெனினும், இயற்கையாய் அமைந்த சிறு சரிவின் முழுப்பயனைப் பெறவேண்டியும் மிகுதியான நிலப்பகுதிகள் பாசனம் பெறவேண்டியும், இதனை



வளைவுகளுடன் 90 கிலோமீட்டர் ஓடுமாறு அமைக்கப்பட்டுள்ளது.இவ்வாய்க்கால் வளைந்து வளைந்து உள்ளதால் கோண வாய்க்கால் எனவும் அழைக்கப்படுகிறது.

700 ஆண்டுகள் பழமை வாய்ந்த இந்த அணை பகுதியில் உள்ள காளிங்கராயன் சிலையைச் சுற்றி இருக்கும் இடங்களைப் பார்வையாளர்கள் எளிதில் பார்வையிட ஒரு சுற்றுலா தளமாக மாற்றினால், இந்த அணையின் சிறப்பை இன்னும் பலர் அறிந்துகொள்ள உதவியாக இருக்கும் என்பது எமது வேண்டுகோள்...

# வணிகமும் கலிங்க தேசமும்

## தளி. ராஜசேகர் பாண்டுரங்கன்



கி.மு. 261ல் கலிங்கம் நோக்கிய மௌரியரின் படையெடுப்புக்கு முக்கியக் காரணம், கலிங்கர்கள் கடல் வணிகத்தில் சிறந்து விளங்கி, செல்வ செழிப்புடன் விளங்கியதே என ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

பொருளாதார வளத்தில் கலிங்கர்கள் சிறந்து விளங்கியதால், கலிங்கத்திற்கு எதிரான, மௌரியரின் படையெடுப்பை வெகு நாளைக்கு அவர்களால் தக்க வைக்கமுடிந்திருந்தது.

கலிங்கர்களின் வர்த்தக மற்றும் பொருளாதார நடவடிக்கைகளுக்கு ஆதாரமாக அக்காலகட்டத்தில் ஒரிசாவில் பல நகரங்கள் தோன்றின. தோசலியில், தமுளுக், மாணிக்கப்பட்டணா, கல்கத்தாபட்டணா, கலிங்கப்பட்டணா நடைபெற்ற அகழாய்வின்போது கிமு 400 லேயே நகர நாகரீகம் இப்பகுதியில் சிறந்து விளங்கியமை அறிய முடிகின்றது.

நீர்வழித் தடங்கள் மூலம் பல ஊர்களிலிருந்து பட்டினங்களுக்கு வணிகப் பொருட்கள் வந்து சென்றமை அறிய முடிகின்றது. கலிங்கத்தில் வணிகம் சிறந்து விளங்கியமைக்கு கீழ்க்கண்ட காரணங்கள் கூறப்படுகின்றன. முதலில் இங்கு நடைபெற்ற சந்தைகளும் திருவிழாக்களும் வணிகத்தை ஊக்குவித்தன, பல அறநிலையங்கள் தோன்றி வணிகத்தை ஆதரித்தனர், கடற்கரையோரங்களில் வணிக நடவடிக்கைகள் பெருகின, வணிகத்தில் சிறந்த விளங்கிய



கிராமங்கள் நகரங்களாக உருவெடுத்தன, வணிகத்தை அரசர்களும் அமைச்சர்களும் பெரிதும் போற்றினர்.

மேற்கண்ட காரணங்களோடு கலிங்கமானது ஒரு முக்கிய புவியியல் அமைப்பில் இருந்ததால், வணிகத்திற்கு மையத்தளமாக இது விளங்கியது. கலிங்கப் பேரரசன் காரவேலனின் படையெடுப்பும் கூட சங்கம் என்ற அடைமொழி உடைய தமிழ் வணிகக் கூட்டமைப்பிற்கு (*Tiramira Sanga*) எதிரான ஒரு நடவடிக்கை இருக்கும் என அறிஞர்கள் கருதுகின்றனர். வணிகத்தின் பொருட்டு கலிங்கர் சாலைகளையும் தகவல் பரிமாற்றத் தொழில்நுட்பங்களையும் வளர்த்துக் கொண்டனர். இதன் மூலம் இந்திய துணை கண்டத்தின் மற்ற பகுதியிலிருந்து பல கைத்தொழில் கலைஞர்கள், தொழில்நுட்பக் கலைஞர்கள், வணிகர்கள் மற்றும் தொழிலாளர்கள் கலிங்கத்தை நோக்கி வந்த வண்ணம் இருந்தனர்.

புரா, பட்டணா, நகரா, கடகா, படகா, கதா என்ற பெயர்களில் முடியும் பல வணிக வாழிடங்கள் உருவாகின. கலிங்கப்பகுதியிலிருந்து பல நாடுகளுக்கு வணிகர்கள் வணிகம் செய்ய முற்பட்டனர். உள்நாட்டில் நடைபெற்ற பல சந்தைகள் வணிக நகரங்கள் உருவாக மிக முக்கியமான காரணமாக இருந்தன. இந்த வணிகச் சந்தைகள் கலிங்க, பகுதியில் "ஹட்டாஸ்" என்று அழைக்கப்பட்டன. ஹட்டாஸ் என்பது தமிழகத்தில் நடைபெற்ற வாரச்சந்தை ஆகும். நகரங்களைப் போல் அல்லாமல் வாரச்சந்தையில் நாட்டுப்புறங்களிலிருந்து வந்த விளைபொருட்கள் நேரடியாக உற்பத்தியாளர்களால் விற்கப்பட்டன. இந்த வார சந்தைகள் கோவில்களோடு தொடர்புடைய, அதன் கட்டுப்பாட்டில் இருந்த சந்தைகள் ஆகும். வாரச்சந்தையில் இருந்து திரப்பட்ட வரியானது கோவிலுக்குச் செலுத்தப்பட்டதன் மூலம் இதனை அறியலாம்.

கலிங்கத்தின் பல பகுதிகளிலும், சந்தைகள் இருந்தாலும் கடற்கரையோர மாவட்டங்களில் அதிக அளவில் இச்சந்தைகள் காணப்பட்டன. உள்நாட்டு மக்களின் அன்றாடத் தேவைகளுக்குத் தேவையான பொருட்களை இந்த வார சந்தைகளில் கிடைத்ததாக இதன் மூலம் பெறப்பட்ட வரி விவரங்கள் மூலம் அறிய முடிகின்றது. ஹட்டாஸ் வாரச்சந்தையில் உழவர்கள், கைவினைக் கலைஞர்கள், நேரடியாகத் தங்களுடைய பொருட்களை விற்பனை செய்தனர்.

இந்தச்சந்தைகளில்கண்டிகாஎனும்வாசனைதிரவியம் விற்பனை செய்பவரும் சங்கீகா என்ற சங்கறுப்போரும்,



பாடக்கார என்ற விறகு வெட்டிகளும், ஸ்வர்ணகாரா என்கின்ற பொற்கொல்லர்களும், தட்டார்களும், தாம்புலிகா, என்ற வெற்றிலை வியாபாரிகளும், கும்பக்காரா என்கின்ற குயவர்களும், கைவார்த்தா என்கின்ற மீனவர்களும், குடிகா என்கின்ற சர்க்கரை வெள்ள வியாபாரிகளும், வணிகம் பொருட்டு கூடினர்.

கலிங்க நாட்டில் பொருளாதார வளர்ச்சியில் மிக முக்கிய பங்கு வகித்த மார்க்கம் என்று அழைக்கப்பட்ட பெருவழிகள் ஆகும். மார்க்கங்கள் பெரும்பாலும் சமய சார்புடைய தளங்களுடன் இணைத்தே காணப்பட்டன. தர்மராஜா கலிங்கமார்க்கம் ராஜபாதை சுந்தரிகமார்க்கம் போன்றவை முக்கிய கலிங்கப் பாதைகளாக இருந்தன

இவற்றில்ராஜபாதைஎன்பதுபூரிஜெகநாத்கோவிலை இணைக்கும் முக்கிய வழித்தடம் ஆகும். வணிகத்திற்காகப் போடப்பட்ட இந்த பெருவழிப் பாதைகளில் மௌரியப் படைப்பிற்கும், கலிங்கப்படையெடுப்பிற்கும், சாதவாகனர்களின் படையெடுப்புகளுக்கு எளிதில் வழி வகுக்க உதவியது. இப்பெரு வழிப்பாதைகளே பின்பு நடந்த, முகலாயப் படையெடுப்பிற்கும் முக்கிய காரணமாக அமைந்துள்ளது.

நந்த மன்னர், கோசலையில் இருந்து தனசுலி என்ற கலிங்கப்பட்டினத்திற்குப் போடப்பட்ட சாலைக்கு ஒரு லட்சம் காசு செலவிடப்பட்டதாகக் கல்வெட்டுகள் மூலம் அறிய முடிகின்றது. சங்க இலக்கியத்திலும் மௌரியர்களின் தென்னகப் படையெடுப்பில், மலைகளை குடைந்து வடுகர்களால், சாலைகள் போடப்பட்டதை அறிய முடிகின்றது. வணிகத்திற்காக மௌரியர்களால் போடப்பட்ட இச்சாலை பின்னாளில் தமிழகப் படையெடுப்பிற்கும் உதவி இருக்கலாம் என்பதை இதன் மூலம் அறிய முடிகின்றது. சங்க இலக்கியங்களிலும், தமிழத்தில் இருந்து வணிகத்திற்காக வடுகப் பகுதியை கடந்து வடக்குப் பகுதிக்கு செல்லும் வணிகர்கள் பற்றிய குறிப்புகள் நமக்கு கிடைக்கின்றன.

கங்க அரசன் கீர்த்திவர்மனின் கல்வெட்டுகளின் படி, கழுதைகளும் காளைகளும், எருமை மாடுகளும் வணிகப் பயன்பாட்டிற்கு பயன்பட்டதனை அறிய முடிகின்றது ஒரிசா அருங்காட்சியகத்தில் உள்ள சிற்பங்களில் வணிகப் பயன்பாட்டிற்குப் பயன்பட்ட மாட்டு வண்டி பற்றிய தகவல்கள் நமக்குக் கிடைக்கின்றன.

யுவன்சாமின் கூற்றுப்படி கிபி ஏழாம் நூற்றாண்டில் யானைகளும் வணிக வர்த்தகத்தில் பொருட்களை எடுத்துச் செல்லப் பயன்பட்டவை அறிய முடிகின்றது.



ஜெகநாதர் கோவில் உள்ள போக மண்டபத்தில் காணப்படும் சிற்பங்களில் யானைகளைப் படகின் மூலம் நதிகளில் கொண்டு சென்றதைப் பற்றிய காட்சிகள் நமக்குக் கிடைக்கின்றன. இதன் மூலம் வர்த்தகத்தில் நதிமூலம் பொருட்டக்களை, எடுத்துச் செல்வதும் மிக முக்கிய ஒன்றாக இருந்துள்ளதை அறிய முடிகின்றது. படகின் முலம் வரவழைக்கப்பட்ட பொருட்கள் காட்டா என்ற நதித்துரைகளில் இறக்கி வைக்கப்பட்டன.

கவரவேல்னின் கல்வெட்டுகளிலிருந்து கலிங்கத்தில் காசுகளின் பயன்பாடு இருந்ததை அறிய முடிகின்றது. ஒன்பதாம் நூற்றாண்டு கல்வெட்டுகளில் ரூபியா என அழைக்கப்பட்ட காசுகள் வழக்கத்தில் இருந்தது. அதேபோல ஹிரண்யா என வகைப்பட்ட காசுகளும் வழக்கத்திலிருந்துள்ளன. ஹிரண்யா என்பது தங்கக் காசுகளையும், ரூபாயா என்பது வெள்ளி நாணயங்களையும் குறிப்பிட்டதாக இருக்கலாம் என அறிஞர்கள் கருதுகின்றனர். ஒரிசாவில் கங்கர்கள் காலத்தில் மடா, பணா, என்ற தங்க நாணயங்களும் இருந்துள்ளன.

உலோக நாணயங்கள் மட்டுமன்றிக் கௌளி என அழைக்கப்பட்ட சோழிகளும் கலிங்கத்தில் மிக முக்கிய நாணயமாகக் கருதப்பட்டது யுவான்சங்கின் குறிப்புகள் படி கௌளிகளும் முத்துக்களும் நாணயங்களாகக் கருதப்பட்டுள்ளமை அறிய முடிகின்றது. எட்டாம் நூற்றாண்டில் கௌளி சோலிகளே மிக முக்கிய நாணயமாக ஒரிசாவிலிருந்துள்ளது. இந்த கௌளி சோழி நாணயமானது கடா, கண்டா என்ற பண மதிப்பீட்டு அளவில் உபயோகப்படுத்தப்பட்டுள்ளது. கௌளி சோழிகளானது ராஜ முத்திரைகள் அற்று இருந்ததால் அதனை அரச அங்காரமுடைய மதிப்புமிக்க பணமாக கருத இயலவில்லை. ஆனால் பண்டைய காலம் தொட்டே மக்களின் புழக்கத்தில் ஊர்புறங்களின் பணமாக மக்கள் பணமாகச் செயல்பட்டு வந்துள்ளது அறிய முடிகின்றது. அனந்தவர்மனின் அதனால் 12 ஆம் நூற்றாண்டு கல்வெட்டு இந்த கௌளி சோழி நாணயங்கள் பயன்படுத்தியதைப் பற்றிக் குறிப்பிடுகிறது.

நாணயங்கள் மட்டுமன்றி அளவீட்டு முறைகளும் ஒரு முக்கிய பொருளாதாரம் குறியீடாகப் பயன்பட்டு வந்துள்ளது.

நெல் மற்றும் அரிசிகளை அளக்க பவுடி என்ற அளவு முறை பயன்படுத்த வந்துள்ளது. தமிழகத்தில் காணப்படும் படி என்ற அளவு முறையோடு இச்சொல் ஒத்துப்போவதை நாம் இங்கு கவனிக்கத்தக்கது. கலிங்கத்தில் பயன்படுத்திய பவுடி என்ற அளவு முறை நெல் போன்ற தானியங்களை அளப்பதற்குப் பயன்பட்டவை. நீர அளவை முறைகள் கரங்கா மற்றும் குச்சங்கா என்றும் அழைக்கப்பட்டன.

கலிங்க தேசத்தில் செயல்பட்ட வணிகர்கள்

பண்டைய கலிங்கத்தில் வணிகர்கள் சிரேஷ்டிகள் என்றும் சார்ந்த வாகா என்றும் அழைக்கப்பட்டனர். சிரேஷ்டிகள் என்போர் உள்ளூரில் கடை வைத்திருக்கும் விற்பனையாளர். சார்த்தவாகா என்போர் நெடுந்தூரம் சரக்குகளைக் கழுதை, எருது, எருமை மூலம் எடுத்துக் கொண்டு சேர்க்கும் சாத்து வணிகர்கள் இவர்கள் ஆவார்.

வடமொழியில் சார்தா என்பது சாத்து செல்லும் வணிகக் குழுவையும் சார்ந்த வாகா என்பது சாத்து வணிகத் தலைவரையும் குறிப்பிடுவதாகும். சாத்தவாகாக்களுக்கு செல்லும் திசைகளும், எங்கே தங்க வேண்டும், எவ்வாறு உணவு கிடைக்கும், எவ்வாறு பாதுகாப்பாக இருக்க வேண்டும், அச்சம் தரக்கூடிய இடங்கள் எவை என்பதைப் பற்றி முழு அறிவும் உடையவர்களாக இருந்துள்ளனர்.

சார்த்தவாக பற்றிய குறிப்புகள் சமண மத இலக்கியங்களில் காணப்படுகின்றன பல வணிகக் கழகங்கள் ஒன்றாக சேர்ந்து ஓர் இடத்தை நோக்கிப் பயணிக்கும் குழுவாக இந்த சாத்துக்கள் இருந்துள்ளன. வெவ்வேறு இடங்களில் துவங்கிய சாத்துக்கள் ஒரே இடத்தில் இருக்கும் அல்லது வெவ்வேறு இடங்களுக்கும் இவை பிரிந்தும் சென்றிருக்கின்றன.

ஒரு சார்த்தவாவதற்கு கீழே இணைந்துள்ள பல்வேறு வணிகர்களை சங்கராத்திரிகா என அழைக்கப்பட்டனர். சங்கராத்திரிகாக்கள் சார்த்த வாகாவின் வார்த்தைகளுக்குக் கட்டுப்பட்டு பயணம் மேற்கொள்ளும் முறை சாத்து



வணிகத்தில் காணப்பட்டது.

ஒரு நகரத்தில் துவங்கிய பயணம் மறு நகரம் அடையும்வரை சங்கராத்திரிகாக்களுக்கு எந்தவிதத் துன்பமும் நேராமல் உணவு தங்குமிடம் உடை பாதுகாப்பு மருத்துவம் ஆகியவற்றை அளிக்கும் ஒரு வணிகப்பயண நிறுவனமாக இது செயல்பட்டுள்ளது. பாதுகாப்பற்ற இடமாகக் கருதப்படும் ஆறுகளையும் அடர்ந்த காடுகளையும் பல சாத்து, பயண குழுக்கள் ஒன்று சேர்ந்து கடந்துள்ளபடி பற்றி நமக்கு வரலாற்றில் குறிப்புகள் கிடைக்கின்றன.

கலிங்கத்தில் செயல்பட்டு வந்த பன்னாட்டுத் தரை மற்றும் கடல் வணிகர்களுடைய பெயர் சாதவாஸ் என அழைக்கப்பட்டது முதலில் சாதவா என்பது சாது , அதாவது நேர்மையான மனிதன் என்ற பொருளில் எடுத்துக் கொள்ளப்பட்டது. ஆனால் இச்சொல் சார்ந்தவாகா என்ன சொல்லிலிருந்து மருவிய சொல்லாகவே ஆய்வாளர்கள் கருதுகின்றனர். சாகு சாது என்ற நூல்கள் பிராமண சத்ரிய வைசிய மற்றும் பல்வேறு ஜாதி குழுக்கள் பயன்படுத்திய பெயராக இருந்ததால், வருமானம் மிக்க தொழிலுக்குப் பல்வேறு சமூக பின்புலத்திலிருந்து வணிகர்கள் வந்து இருக்கலாம் என அறிய முடிகின்றது.

கடல் வணிகத்தில் உடல் உழைப்புக்கான வேலைகளை ஒரு சாரரும் தலைமை வேலையைத் தலைவர்களும் ஏற்று நடத்தியுள்ளனர் அவர்களை மங்க ராஜா மகாநாயக்கா என அழைத்துள்ளனர். கலிங்கத்தில் கடல் வணிகத்தில் செயல்பட்ட நாவிகா மற்றும் மகாநாவிகாவுக்கு இடையே பல வேறுபாடுகள் இருந்துள்ளது. அரசகுடியில்





இருந்த நாவிகரை மாநாவிகா என்ற அழைக்கும் வழக்கம் இருந்துள்ளது. இந்த மாநாவிகா என்பது தமிழில் மாநாயக்கன் என்று திரிகின்றது.

இன்றும் தமிழகத்தில் கடல் வணிகத்தில் ஈடுபட்டு வந்த மக்களை நாய்க்கன் என்ற அழைக்கும் வழக்கமுள்ளது. சிலப்பதிகாரத்தில் கண்ணகியின் தந்தையை மாணாக்கன் என்று அழைப்பதை நாம் அறியலாம். இலங்கையில் கிடைத்த பல தமிழ் கல்வெட்டுகள் தமிழக மாநாவிகர்கள் வணிகத்தில் ஈடுபட்டதை பற்றிக் குறிப்பிடுகின்றது.

கலிங்கத்தைப் பொருத்தவரை கடல் வணிகத்தில் ஈடுபட்ட சாதவாக்கள் மிக முக்கிய சமூக அந்தஸ்தைப் பெற்றிருந்தனர் அரசர் பிரதானிகளுக்கு அடுத்தாக இந்தக் கடல் வடிவத்தில் ஈடுபட்ட சாதுவாக்களே இடம்பெற்றிருந்தனர்.

கடல் வணிகத்தில் ஈடுபட்ட வணிகர்களுக்கும் அரசர்களுக்கும் இடையே மன உறவு இருந்துள்ளமை அறிய முடிகின்றது. பல கல்வெட்டுகளில் அரசர்களும் இவர்களும் நெருங்கிய உறவினர்களாக இருப்பதை நாம் அறிய முடிகின்றது. வணிகத்தின் மூலம் பெறப்பட்ட செல்வச் செழிப்பு இவர்களுக்கு அரசர்களுடன் மன உறவு ஏற்பட வழி வகுத்தது என அறிஞர்கள் கருதுகின்றனர்.

வணிகத்தின் பொருட்டு இந்த வணிகர்கள் நெடுங்காலம் நெடுந்தூரம் பயணம் செய்ததால் இவர்களுக்கும் இவர்களுடைய குடும்ப உறுப்பினர்களுக்கும் இடையே நீண்ட இடைவேளை ஏற்பட்டிருந்தது குறிப்பாகக் கணவன் மனைவியிடையே மிகப்பெரிய இடைவெளி இருந்தது என்பதை அறிய முடிகின்றது. இதனைப் பற்றிப் பல வாய்வழிக் கதைகள் நமக்கு கிடைக்கின்றன. சங்ககாலத்தில் வணிகத்திற்காகத் தலைவியை விட்டுப் பிரிந்து செல்லும் தலைவனைப் பற்றி நாம் அறிந்திருக்கின்றோம்.

கடல் வணிகத்திற்காக செல்லுவோர் அதிக ஆபத்துகளையும் நஷ்டங்களையும் சந்திக்க வாய்ப்பு அதிகமாக இருப்பதால் அவர்கள் மிகுந்த கடவுள் நம்பிக்கை உடையவர்களாகவும் சடங்குகளின் மீது நம்பிக்கை உடையவர்களாகவும் இருந்துள்ளனர். இதனால் கடல் பயணம் பாதுகாப்பாக அமையவும் மீண்டும் சொந்த நாடு நோக்கித் திரும்பி வருவதற்குக் கலிங்கத்தைச் சேர்ந்த வணிகர்கள் மங்களா என்ற தெய்வத்தை வழிபட்டு வந்துள்ளனர்.

கோவலனின் முன்னோரைக் காப்பாற்றி மீண்டும் கரை சேர்த்து உதவிய மணிமேகலை தெய்வத்தின் பெயரை தனது மகளுக்கு சூட்டியதைப் பற்றி சிலப்பதிகாரத்திலும் மணிமேகலைப் பாடல் குறிப்புகள் நமக்குக் கிடைக்கின்றன. இந்த மணிமேகலை சமுத்திரத் தெய்வமாக அறியப்படுகின்றாள். வடபகுதியில் தாராதேவியுடனும் இலங்கையில பத்தினி தேவி வழிபாடும் ஒன்று போல் அமைவதை நாம் இங்குக் காண முடிகின்றது. நடுநாட்டு பகுதியைச் சேர்ந்த கடல் வணிகர் மரபினரான, கவறைகள் (வளஞ்சியர்) தங்களின் குலதெய்வமாக நீரில் வந்த தெய்வம் என்று இத்தெய்வத்தை "சமுத்திர அம்மன்" என்ற பெயரில் இன்றும் வழிபட்டு வருகின்றனர்.

மீனவனின் கனவில் வந்த மங்களா தேவி, நதியின் ஆழத்தில் மூழ்கி இருக்கும் தன் சிலையை மீட்டு வழி வழிபடவேண்டும் என்று கேட்டுக்கொண்டதாக காகத்பூரில் அமைந்த இந்த தேவி கோவிலின் புராணம் கூறுகிறது. அத்தேவியின் சிலையில் சிலம்பு ஒன்றை பிடித்து இருப்பதைக் காணலாம். தமிழகத்தில்(பெரம்பலூர் மாவட்டம் வெங்கனூர்)வாழும் கவறை சமூகத்தினர் தாங்கள் குல தெய்வமாக வழிபடும் சமுத்திரத்து அம்மன், வெள்ளத்தின் போது ஏரிநீரில் வந்தது எனக் கூறி அதனை வழிபடுகின்றனர்.

இன்று போல அன்று அறிவியல் உபகரணங்கள் இல்லை என்றாலும் கடல் வணிகர்கள் பருவ காலங்களையும் காற்று வீசும் திசையும், அந்நிய நாடுகளின் நிலைமைகளையும் நன்கு அறிந்தவர்களாக இருந்துள்ளனர். எனவே அவர்களின் கடல் பயணங்கள் மிகவும் ஆபத்து மிக்கதாக இருந்தாலும் அதனை ஏற்று கடல் வணிகத்தைத் துணிந்து செய்துள்ளனர்.

வணிக குழுக்கள்

கலிங்கத்தில் ஒரே தொழிலைச் செய்த தொழிலாளர்களும் வணிகர்களும் குழுவாக இணைந்து வணிகக் கணங்களையும், கைவினைத் தொழில்சார் கணங்களையும் ஏற்படுத்தினர்.தொழில் கணங்கள் ஸ்ரீனி குலா குகா ஜாதி வர்த்தா சமூக சமுதாய பரிஷத் சாரதா நாயகமா என்று அழைக்கப்பட்டன.

தங்க வணிகம் செய்வோர் ஸ்வர்னிகா என்றும், பணம் மாற்றுவோர் ஹிரண்யிக்கா என்றும், சங்க கருத்து வளையல் செய்வோர் சங்கீகா என்றும், மாணிக்க கற்களை வெட்டுவோர் மணி காரா என்றும் கற்களை வெட்டுவோர் கஸ்டாரிக்கா என்றும் என்னை வெற்றிலை விற்போர் வரிக்கா என்றும் லட்டு போன்ற இனிப்பு பொருட்களைச் செய்வோர் மோதக்கார என்றும் பழம் விற்போர் பழ வணிஜா என்றும் வேர்களை விற்போர் மூல வணிஜா என்றும், கல்விருப்போர் சித்தகாரா என்றும் சர்க்கரைவீர்போர் சர்க்கரை வனிஜா, நறுமணத் தைலங்கள் விற்போர் காந்தி என்றும், பட்டு நூல் நூற்போர் கொசவிக்கா என்றும், தயிர் விருப்பம் தாஹியக்கா


Fig. 5: Terracotta seal showing sea going vessel, Chandraketugarh, West Bengal

என்றும், ஊதுபத்தி வணிகர்கள் சூரண குட்ட கந்த தைலக்கா என்றும் அழைக்கப்பட்டனர்

பானை செய்வோர் கும்பாரா என்றும் பட்டு நசவு செய்வோம் பட்டாலா என்றும் தங்க அணிகலன்கள் செய்வோம் சொர்ணகாரா என்றும் பாடுபவரும் வாசனை பொருட்களை விற்போறும் காந்தாரா என்றும் மாடுகளை வளர்ப்போம் கௌரா என்றும் அழைக்கப்பட்டனர்.

மேற்கண்ட வணிக மற்றும் தொழில் குழுக்கள் தென்னிந்தியாவில் செயல்பட்ட வணிகக் குழுக்களோடு சில ஒத்துள்ளமை. நாம் இங்கு அறிய முடிகின்றது. சோட தொந்தரர்கள் காலத்தில் இவ்வாறான வணிக குழுக்கள் கலிங்கப்பகுதியிலும் செயல்பட்டுள்ளது சோடகங்கர்கள் தமிழகத்திற்கும் கலிங்கத்திற்கும் இடையேயான ஒரு வர்த்தக உறவை ஏற்படுத்தி இருந்தமை நாம் இங்கு அறிய முடிகின்றது.

வணிக கணங்கள் ஒரு குழுவாக மட்டும் செயல்படாமல் வங்கிகள் போன்றும், வணிக நல வாரியங்கள் போன்றும் செயல்பட்டு உள்ளன. தங்களுக்குக் கீழ் இருக்கும் மனிதர்களுக்கு அவை கடன் அளித்து வணிகத்தைப் பெருக்கவும் அவர்களை ஒழுங்கு படுத்தும் அமைப்பாக வணிகக் கணங்கள் செயல்பட்டு உள்ளன.

கௌடல்யரின் அர்த்த சாஸ்திரத்தில் கடல் வணிகத்திற்கு அதிக அளவு வட்டி பெற வேண்டும் என்று கூறப்படுகின்றது. ஏனெனில் மற்ற வணிகத்தை விடக் கடல்



வணிகம் அதிக ஆபத்து நிறைந்தது. எனவே கொடுத்த காசு கிடைப்பதற்கு வாய்ப்புகள், சற்று குறைவாகவே இருக்கும். அதனைக் கருத்தில் கொண்டு கடல் வணிகர்களுக்கு அதிக வட்டி விகிதத்தில் கடன்கள் அளிக்கப்பட்டன இவற்றை முன் நின்று நடத்தியவை வணிகக் கணங்களாகும்.

மற்ற வணிகர்களிடமிருந்து பெறப்பட்ட முதலீடுத் தொகையானது கடல் வணிகத்திற்குச் செல்லும் வணிகர்களுக்கு அதிக வட்டியில் கொடுக்கப்பட்டது. மேலும் இதன் மூலம் பெறப்பட்ட வருமானம் ஆனது கோவில்களுக்கும், அற செயல்பாடுகளுக்கும் இந்த வணிக நிறுவனங்கள் கொடுத்துள்ளனர்.

அதேபோல ஸ்ரேனி, மற்றும் நாய்கமா போன்ற வணிகக் குழுக்களின் கீழ் செயல்பட்ட இந்த வணிக அமைப்பிற்குச் சமய என்றும் பெயர். பாதுகாப்பான கடன்களுக்கு ஒரு சதவீத வட்டியும் பாதுகாப்பற்ற கடன்களுக்கு 5% வரை வட்டியும் வசூலிக்கப்பட்டது மேலும் கடனுக்கு பொருட்களை பெற்றுச் சென்று வணிகம் செய்யப்பட்டது. ஆறு மாதத்திற்குள் விற்பனை பொருட்களுக்கு பணம் தரவில்லை என்றால் அதற்கு 5% சதவீதம் வரை வட்டி வசூலிக்கப்பட்டது. கலிங்கத்திற்கு இலங்கை தெற்காசிய ஜப்பானிய சீன ரோமானிய ஆப்பிரிக்க வணிகர்கள் வந்து வணிகம் செய்துள்ளனர். இந்நாடுகளுக்குப் பல பொருட்களைக் கலிங்கம் ஏற்றுமதி செய்துள்ளது.

பன்னாட்டவரின் குறிப்புகளிலிருந்து மற்ற இலக்கியங்களிலிருந்தும் கலிங்கத்திலிருந்து வாசனைப் பொருட்கள், வெண்சங்குகள், மருத்துவ பொருட்கள், இரும்பு உபகரணங்கள், செம்பு ஆபரணங்கள் மண்பானைகள், நவரத்தினங்கள், கஸ்தூரி, அகிர் கட்டைகள் சந்தனம் கற்சிலைகள், தந்தங்கள், தந்தங்களால் செய்யப்பட்ட கலைப் பொருட்கள், பருத்தி, பட்டு மிளகு, உப்பு தாவர எண்ணெய்கள், கரும்பு , அரிசி, தேங்காய்,மீன், காடு விலை பொருட்களா தேன், மரக்கட்டைகள், தேன் மெழுகு மற்றும் யானைகள் ஏற்றுமதியாக்கப்பட்டன. கலிங்கத்திலிருந்து மிக நேர்த்தியான துணி வகை வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. மகாபாரதத்திலும் தமிழ் இலக்கியங்களில் வரும் கலிங்கம் என்ற ஆடையைப் பற்றிக் குறிப்புகள் நமக்குக் கிடைக்கின்றன.

கலிங்கமானது, ஒரு மெல்லிய ஆடையாகும். இதன் ஒரு பகுதியில் நின்று கொண்டு மற்ற பகுதியை எளிதில் பார்க்க முடியும். இதனால் இந்த ஆடைகளுக்கு வெளிநாட்டில் மிகப்பெரிய வரவேற்பு இருந்துள்ளது. குறிப்பாக உள்ளாடையாக இதனை அணிந்து கொள்ளப் பல மேலைநாட்டு அரச குலங்கள் விரும்பின. முழு ஆடையையும் ஒரு சிறு மூங்கில் குச்சியில் அடைத்து விடலாம் என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்.

இரும்பு ஆயுதங்களைச் செய்வதில் கலிங்கம் சிறப்புற்று விளங்கியது. கலிங்கத்தில் செய்யப்பட்ட இரும்பு ஆயுதங்கள் மிகவும் கூர்மையானதாகவும் வலுவானதாகவும் நல்ல கலை நயத்துடன் வடிவமைக்கப்பட்டதாக வரலாற்று ஆவணங்கள் நமக்குக் கூறுகின்றன. சைலோத்துவ அரசனான





மாதவ ராஜா தனது கூர்மையான ஆயுதங்கள் கொண்ட படையால் எதிரிகளை விரட்டினான் என்று கூறப்படுகின்றது. கலிங்கத்தின் பல இடங்களில் இரும்பு உருக்கு ஆலைகளைத் தொல்லியல் அறிஞர்கள் கண்டறிந்துள்ளனர்.

தங்கத்தின் மூலமும் முத்துக்களை வைத்தும் பல ஆபரணங்கள் கலிங்கத்தில் செய்யப்பட்டன. கலிங்கத்தில் கண்டெடுக்கப்பட்ட பல செப்பேடுகள் மூலம் ஆபரணங்களைச் செய்த பொற்கொல்லர்கள் கைவினை கலைஞர்களைப் பற்றிய தகவல்கள் நமக்குக் கிடைக்கின்றன. இவர்களால் செய்யப்பட்ட ஆபரணங்கள் புவனேஸ்வர் நகரிலும் பூரி ஜகன்நாத் நகரில் உள்ள ஓவியங்களில் சிற்பங்களின் அணிகலங்களாக உள்ளன. கிபி ஏழாம் நூற்றாண்டு வரை அதிக அளவில் முத்துக்களால் ஆன ஆபரணங்களைச் செய்யப்பட்டுள்ளமை அறிய முடிகின்றது. கலிங்கத்தில் பல வரலாற்றுச் சிறப்புமிக்க கட்டடக்கலை சிறப்புமிக்க கோவில்கள் எழுப்பப்பட்டிருப்பதன் மூலம் அங்குக் கட்டடக்கலை நிபுணர்கள் மற்றும் கல் தச்சர்கள் சிற்பிகள் நிறைந்து காணப்பட்டதை நாம் அறிய முடிகின்றது.

இவர்கள் இந்து பௌத்த மற்றும் சமண சமயங்களுக்குப் பல அரிய சிற்பங்களை உருவாக்கிக் கொடுத்துள்ளனர். அனங்க பீமதேவா காலத்தில் இந்த கோவில் கட்டிடக்கலை நிபுணர்கள் சூத்திரதாரர் என அழைக்கப்பட்டுள்ளனர் இவர்கள் வைஸ்ய குலத்தைச் சேர்ந்தவர் என்பதும் இக் கல்வெட்டின் மூலம் நாம் அறிய முடிகின்றது.

மகாபாரத குறிப்புகளின் படி யானைகளைக் கலிங்கதேச ஏற்றுமதி செய்துள்ளது. கலிங்கத்தில் பெறப்பட்ட யானையானது சிறந்த வகையைச் சார்ந்தது எனப் பல இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. யானைகளைப் பிடிப்பதற்கும் யானைகளைக் கொல்வதற்கும் தனி உரிமமும் வழங்கப்பட்டுள்ளது. இந்த உரிமத்தைப் பெற்றவர்களே யானையைப் பிடிப்பதற்கும் தந்தத்திற்காக யானையை கொள்வதற்கும் அதனை விற்பனை செய்வதற்கும் உரிமை உடையவர் ஆவர்.

(தொடரும்)

# பல்லவ தளபதி உதயசந்திரன்

## கண்ணன்



பல்லவ மல்லன் இரண்டாம் நந்திவர்மரின் இருபத்தி ஒன்றாம் ஆட்சியண்டில் வழங்கபட்ட உதயேந்திரம் செப்பேடு பலவகையில் சிறப்பானது, வழக்கமாக செப்பேடுகளில் , வெளியிடும் அரசரின் புகழைரைகளையும், அவ்வரசரின் குலபெருமைகளையுமே கூறும், ஆனால் உதயேந்திரம் செப்பேட்டில் அரசரின் பெருமைக்கு இணையாக பல்லவ தளபதி உதயசந்திரன் பெருமைகளும், அவர் குல பெருமைகள் தான் இடம் பெற்றுள்ளன, ஒரு பேரரசனுக்கு இணையாக ஒரு தளபதியின் பெருமைகள் கூறப்பட்டுள்ளது யார் இந்த உதயசந்திரன் ?



உதயசந்திரன்

கச்சி பரமேச்சர விண்ணகரத்தின் சுற்று சுவற்றில் உள்ள சிற்பத் தொகுதியில் உள்ள சிற்பங்கள் இதில் வெண்கொற்ற குடையின் கீழ் சிற்பத் தொகுதியின் வலது புறத்தில் அமர்ந்துள்ளது இரண்டாம் நந்திவர்மனகாவும் கீழுள்ள பகுதியில் குதிரை மீது அமர்ந்துள்ள நபர் உதயசந்திரனாக இருக்கலாம் என்று மீனாட்சி அம்மையார் கூறுகின்றார்



உதயசந்திரன், பல்லவர் குலத்திற்கு வழிவழியாக சேகவம் புரியும் குலத்தினை சேர்ந்தவர் (உதயசந்திரன் என்னும் பெயரே இராசசிம்ம பல்லவரின் விருது பெயர்களில் ஒன்று) உதயசந்திரன் தான் சார்ந்திருந்த பூச்சான் குலத்தின் திலகமாக இருந்தவர், மிகவும் பிரபலமான வில்வல புரத்தின் அதிபதி, பாக்கு, தென்னை, மா, பலா, போன்ற மரங்கள் நிறைந்த கரைகளையும், காமத்தினால் நிறம் மாறிய, நிரம்பிய உள்ளம் கொண்ட, மானம் மிக்க பெண்களின் கொங்கைகளிலிருந்து வழியும் குங்குமத்தின் நறுமணத்தினை போன்று வாசம் வீசும் வேகவதி ஆற்றின் தலைவன்

மழை காலத்து மேகங்கள் போன்ற கருமை வாய்ந்த யானைக் கூட்டங்களின் துதிக்கை யிலிருந்து வெளிவரும் நீர்திவவளைகளால் நனைக்கப்பெற்றது போன்ற கடைத்தெருக்களை கொண்ட வழியை உடையதும், எல்லா உலகங்களுக்கும் முக்கிய ஆபரணம் போன்ற வில்வலம் என்ற பெயர் கொண்ட நகரத்தின் அதிபதி இவ்வாறாக உதயேந்திரம் செப்பேடு உதயசந்திரனை அறிமுகம் செய்கின்றது,

தமிழக அரசர்களிலேய நீண்ட காலம் ஆட்சி புரிந்த மன்னர் பல்லவ பேரரசர் பல்லவ மல்லனான இரண்டாம் நந்திவர்மர் (65 ஆண்டுகள்) , ( 77 என்போரும் உண்டு)



பல்லவ மல்லனின் இந்நீண்ட ஆட்சிக்கு உதயசந்திரன் தலைமை ஏற்று நடத்திய போர் வெற்றிகளே காரணம், இதன் காரணமாகவே, ஒரு சேகவன் உதயசந்திரன் அரசருக்கு இணையாக கருதப்பட்டுள்ளார், உதயசந்திரன் நடத்திய போர் வெற்றிகளையும் உதயேந்திரம் செப்பேடு பட்டியலிடப்பட்டுள்ளது

**உதயசந்திரனின் போர் வெற்றிகள்**

பல்லவ மல்லன் இரண்டாம் நந்திவர்மன் நந்திபுரத்தில் சிறைபட்டிருந்த போது தன் கூர்மையான வாளினால் தன் எதிரி கூட்டத்தின் நடுவே கூற்றுவன் போல் புதந்து சித்தரமாய பல்லவனை வென்று இரண்டாம் நந்திவர்மருக்கு அவரது அரசினை முழுமையாக அளித்து

நிம்பவனம், சூதவனம், சங்கர கிராமம், நெல்லூர், சூறாவழுந்தூர் போன்ற இடங்களில் நடந்த போர்களில் பல முறை எதிரிகளை பல்லவன் சார்பாக கலந்து கொண்டு வெற்றி கொண்டவனும் , யாரும் நெருங்க முடியாததும், பயங்கரமானதுமான நெல்வேலி போரிலே எதிர்த்துவந்த சங்கன் என்ற சேரப்படைத்லைவனை வென்றான்

சபரா (சபரதேசத்து) என்னும் பழங்குடியை சேர்ந்த உதயணன் என்ற வேட அரசனை வென்று அவனது மயில் தோகைகளால் ஆன கண்ணாடி தோரணவாயிலை கைப்பற்றினான்

அசுவமேத குதிரையின் பின்னால் ஒடிக்கொண்டிருந்த பிருதிவி வியாக்கிரனை வென்றான்

காளிபகவதியால் காப்பாற்றபட்ட காளிதுர்கம் எனும் ஊரினை கைப்பற்றினான்

மண்ணைக்குடியில் பாண்டியன் சேனையை வென்றவன்

மேற்கண்ட வீரச்செயல்கள் அனைத்தும் பல்லவ மல்லனான இரண்டாம் நந்திவர்மரின் சார்பாக உதயசந்திரன் கலந்து கொண்டு வாகை சூடிய போர்களை குறிப்பன பல்லவ மல்லனின் நீண்ட ஆட்சிக்கு அடிகோலியது உதயசந்திரனின் போர் வெற்றிகளே இதன்காரணமாகவே அவருக்குக்கும், அவரது குலத்திற்கும் இச் செப்பேட்டில் அதி முக்கியத்துவம் அளிக்கப்பட்டுள்ளது

உதயசந்திரன் வழிவழியாக பல்லவருக்கு சேவகம் புரியும் குலத்தினை சேர்ந்தவர் என்பதினை முன்னரே கண்டோம் அவருக்கு பின் அவரது பணியினை அவர் மகன் அவனிசந்திரன் தொடர்ந்தார் போலும்.



அவனிசந்திரன்

பல்லவ மல்லன் இரண்டாம் நந்திவர்மரின் முப்பத்து மூன்றாவது ஆட்சியாண்டில் வெளியிடப்பட்ட புல்லூர் செப்பேட்டில் வில்வலபுரத்து அதிபதியாக இளவரசன் அவனிசந்திரன் என்பவரை குறிப்பிடுகின்றது , வில்வலபுரத்தின் இளவரசன் என்பதிலிருந்தே இவர் உதயசந்திரனின் மகன் என்று உறுதியாகின்றது , உதயசந்திரன் இரண்டாம் நந்திவர்மருக்கு சேவகம் புரிந்தது போன்றே, அவனிசந்திரன் , இரண்டாம் நந்திவர்மரின் மகன் தந்திவர்மரின் ஆட்சியில் சேவகம் புரிந்த இருக்கலாம், கச்சி பரமேஸ்வர விண்ணகரத்திறக்கு பல்லவ மன்னன் தந்திவர்மருடன் இணைந்து மூன்றாயிரம் கழஞ்சு பொன் தானமளித்துள்ளார். அ வ நி ச ந் தி ர ன் பெயரில் கல்வெட்டில் அவநி என்ற பெயர் மட்டுமே உள்ளது மற்ற எழுத்துகள் அழிந்து விட்டன போலும்

இதன் மூலம் தந்தையை போன்றே தந்தையை போன்றே அவனிசந்திரனனும் பல்லவருக்கு சேவகம் புரிந்தார் என்று கருத தோன்றுகின்றது , பல்லவ மன்னர்களிலேயே அதிக ஆண்டுகள் ஆட்சி புரிந்தது இரண்டாம் நந்திவர்மரும், அவரது மகன் நந்திவர்மரும் தான் அவர்களது நீண்ட ஆட்சிக்கு உதயசந்திரன் மற்றும் அவனிசந்திரன் இவர்களது சேவைகளே என்றால் மிகையாகாது.

# பெரும்பாணாற்றுப்படை வழிகள்

## முனைவர்.ஜோ. பிரின்ஸ்



பெரும்பாணாற்றுப்படையைப் பாடியவர் கடியலூர் உருத்திரங்கண்ணனார் என்பவர். கடியலூர் என்னுமூர் எவ்விடத்தது என்பது கூற இயலவில்லை. அவர் கூறியுள்ள பெரும்பாணன் புதிய பெரும்பாணனை எங்குச் சந்தித்தான் என்பதும் தெரியவில்லை. ஆயின், அப்பெரும்பாணன் கூறியுள்ள வழியில் வேற்றரசர் நாடு கூறப்படவில்லை; தொண்டைநாட்டு நிலங்களும் ஊர்களுமே கூறப்பட்டுள்ளன. இவற்றைக் கூர்ந்து நோக்கின், பெரும்பாணன் தொண்டைநாட்டின் உட்பகுதிலிருந்தே புதிய பாணனுக்குக் காஞ்சிக்குச் செல்ல வழி கூறியுள்ளான் என்பது தெளிவாகத் தெரிகிறது.

பெரும்பாணன் புதிய பாணனுக்கு மூன்று இடங்களைத் தெளிவாக் கூறியுள்ளான். அவை முறையே 'நீர்ப் பெயற்று| என்னும் இடத்தின் எல்லையில் அமைந்த துறைமுகநகரம். காஞ்சிக்க முன்னுள்ள பள்ளிகொண்ட பெருமாள் கோவில் (திருவெஃகா) காஞ்சி மாநகரம் என்பனவாகும். பெரும்பாணன் முதலில் துறைமுக நகரத்தை அடைய அவனுக்கு வழி கூறியுள்ளான்; பின்பு அங்கிருந்து காஞ்சிக்குச் செல்ல வழி கூறியுள்ளான். இதனால் அப்புதியவன் எளிதில் காஞ்சிக்குச் செல்லும் வழியையே பெரும்பாணன் கூறியுள்ளான் என்று கருதுதல் தகும். அவன் முதலில் கடற்கரை நகரை அடையும்படி கூறியுள்ளதை நோக்க, அவன் வழி கூறி இடத்திலிருந்து அக்கடற்கரை நகரை அடைவதே எளிதெனக் கருதியிருத்தல் வேண்டும். அவன் கடற்கரைக்குச் சேய்மையிலிருந்து வழி கூறியிரப்பின், கடற்கரை நகரை முதலில் அடையும்படி கூறியிரான்; மிகுதியாக நடக்கும்படி செய்திரான். எனவே, பெரும்பாணன் கடற்கரைக்கு அண்மையிலிருந்தே புதிய பாணற்கு வழி கூறியிருத்தல் வேண்டும் எனக் கொள்வது பொருத்தமாகும்.

### துறைமுக நகரத்திற்குப் போகும் வழி

பெரும்பாணன் புதிய பெரும்பாணனைச் சந்தித்த இடத்திலிருந்து கூறியுள்ள வழி இது என்பதை நினைவிற்கொண்டு, கீழ் வரும் செய்திகளைக் கவனித்தல் வேண்டும்.



*1. உமணர் உப்பு வண்டிகளையும் தனி மாடுகளையும் ஓட்டிச் செல்லும் நெடிய வழிகள் வழியிற்காணப்படும். அவ்வழிகளில் வணிகர் கழுதைகளின் மீது மிளகுப்பொதிகளை ஏற்றிச் சென்று வாணிகம் செய்வர். அவ்வழிகளில் சுங்கச்சாவடிகள் உண்டு; நாடுகாவல் செய்யும்விற்படை வீரர் ஊர்கள் உண்டு. அவ்வழிகளிற் காடுகளும் உண்டு.*

*2. காடுகளைத் தாண்டியதும் பாலை நிலம் காணப்படும். அங்கு எயினர் ஈத்திலைக் குடிசைகளில் வாழ்வர். இப்பாலை நிலத்தைக் கடந்தவுடன் எயினர் அரண்கள் இருக்கும்.*

*3. அரண்களுக்கு அப்பால் முல்லை நில மக்களாகிய இடையர் குடியிருப்புகள் காணப்படும். அங்கு எயினர் ஈத்திலைக் குடிசைகளில் வாழ்வர். இப்பாலை நிலத்தைக் கடந்தவுடன் எயினர் அரண்கள் இருக்கும்.*

*4. முல்லை நிலம் தாண்டிய பின்பு வயலும் வயல் சார்ந்த இடமுமாகிய மருத நிலம் காணப்படும்.*

5. மருத நிலத்தில் குளங்களும் ஏரிகளும் உண்டு. தருப்பைப் புல்சேய்ந்த குடிசைகளி;ல் வாழும் வலையர், நீர் நிலைகளில் வலை வீசி மீன் பிடிப்பர். மருதநிலத்தில் உள்ள குளங்களிலும் ஏரிகளிலும் மணமிக்க மலர்கள் மலர்ந்திருக்கும் அங்குள்ளோர் அவற்றைப் பறிப்பர்.

6. அம்மருதநிலப் பகுதியல் செல்லின், மறையவர் உறைபதி (பிற்கால அகரம் அல்லது பிரமதேயம், அல்லது சதுர்வேதிமங்கலம்) ஒன்றை அடையலாம். அங்கு வேதமோதி வேள்ளி செய்யும் வேதியர் வாழ்வர்.

7. அடுத்து, மகளிர் நீராடும் துறை காணப்படும். அத்துறையில் மகளிர் நெகிழவிட்ட மணிகள் பதித்த நகையைச் சிச்சிலிப்பறவை எடுத்துச் சென்று மறையவர் வேள்விச் சாலையில் நட்டுவைத்த தூண் மீது அமரும் அம்மறையவர் வாழும் இடம் ‘நீர்ப்பெயற்று| என்பது. அதன் எல்லையில் துறைமுகம் அமைந்துள்ளது.

8. அங்கு மேற்றிசையிலிருந்து வெண்ணிறக் குதிரைகளையும் வடதிசையிலிருந்து பல பொருள்களையும் கொண்டுவரும் கப்பல்கள் சூழ்ந்து கிடக்கும் கடற்பக்கம் உண்டு. அங்குப் பண்டசாலைகளையும் பரதவர் மாடங்களையும் செல்வர் வளமனைகளையுமுடைய பட்டினம் உண்டு. கலங்கரை விளக்கமும் அங்கு உண்டு.

துறைமுக நகரத்திலிருந்து காஞ்சிக்கு வழி

1. துறைமுகப்பட்டினத்திலிருந்து காஞ்சி நோக்கிச் செல்லும் வழியில் தென்னந்தோப்புகள் மிகுதியாயுண்டு அத்தோப்புகளில் மக்கள் குடியிருப்புகள் இருக்கும் அங்குப் பலாப்பழமும், வாழைப்பழமும், இளநீரும், நுங்கும் கிடைக்கும்.

2. அவற்றுக்கப்பால் உள்ள வழியில் விண் வருடும் மாடங்களையுடைய ஊர்கள் காணப்படும்.

3. பின்பு வள்ளிக் கூத்தாடும் புறநாடுகள் பல இருக்கும்.

4. இவை அனைத்தையும் கடந்த பின், பெருமாள் பள்ளி கொண்டுள்ள இடம் காணப்படும். அங்கு வெயில் நுழையாத இளமரக்கா உண்டு; மணல் உண்டு; அங்குப் பொழுது போக்கச் செல்பவர் குப்பிக்கள்ளைப் பருதி அழகிய மகளிரோடு பகற்பொழுது விளையாடிப் பகற்பொழுது விளையாடிப் பெரிய நீர்த்துறையில் நீராடுவர்.

5. பின்பு சோலைகளும் காவற்காடும் சூழ்ந்த காஞ்சி மாநகரமதில் காணப்படும். அம்மதில் செங்கல்



மதிலாகும். அம்மதிலுள் காஞ்சி முதூர் அமைந்திருக்கும். பெரும்பாணன் கூறியுள்ள இவ்வழிகளில் இரண்டாம் வழி கடற்கரைப்பட்டினத்திற்கும் காஞ்சிக்கும் இடைப் பட்டாதலின், தாம் ஆராயத் தேவை இல்லை. முதல் வழி எங்கிருந்து தொடங்கியிருத்தல் கூடும் என்பதைக் கண்டறிதல் பயன் தரும் அதனைக் கண்டறியும் முன்பு, பெரும்பாணன் குறிப்பிட்டுள்ள ‘நீர்ப்பெயற்று| என்ற இடம் யாதெனக் காண்பது நலம். அதன் எல்லையில் துறைமுகம் இருந்ததென்றும் இறக்குமதி நிகழ்ந்த தென்றும் அங்கு வளம் மிகுந்த பட்டினம் இருந்ததென்றும் பெரும்பாணனே கூறியுள்ளான்.

ஒய்மானாட்டுக்கு வடக்கேயிருந்த தொண்டை நாட்டில் மாமல்லபுரமே பல்லவர் காலத்தில் சிறந்த துறைமுகப் பட்டினமாயிருந்தது. “கி.பி.7ஆம் நூற்றாண்டில் நரசிம்மவர்மன் இலங்கையரசனான மானவன்மனுக்கு உதவியாக இருமுறை கப்பற்படையை மாமல்லபுரத்திலிருந்தே இலங்கைக்கு அனுப்பினான்”1 “அதே நூற்றாண்டின் முற்பாதியில் யுவான்சுவாங் என்ற சீன வழிப் போக்கன் இந்த மாமல்லபுரம் சிறந்த

துறைமுகநகரம் என்று பாராட்டியுள்ளான்.''2 கி.பி. 8ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த திருமங்கையாழ்வார் மாமல்லபுரம் சிறந்த துறைமுக நகரம் என்பதைக் கீழ் வரும் பாடலில் தெளிவாகக் குறித்துள்ளார்.

'புலங்கொள்நிதிக் குவையோடு
புழைக்கைம்மாக்கிற்றினமும்
நலங்கொள்நவ மணிக்குவையும்
சுமந்தெங்கும்நான்றொ சிந்து
கலங்களியங் கும்மல்லைக்
கடன்மல்லைத் தலசயம்
வலங்கொள் மனத் தாரவரை
வலங்கொளென் மடநெஞ்சே.''3

இவற்றை நோக்கித் தொண்டை நாட்டில் மாமல்லபுரமே சிறந்த துறைமுக நகராய் இருந்தது என்பது தெளிவாகும். ஆயின், இம்மாமல்லபுரமே தொண்டைமான் திரையன் காலத்திலும் துறைமுக நகரமாய் இருந்ததா?| என்பது ஆய்வுக்குரியது.

'நீர்ப்பெயற்று என்பதன் எல்லையில் துறைமுகப் பட்டினம் இருந்தது| என்று பெரும்பாணாற்றுப் படை பேசுகிறது. "நீர்ப்பெயற்று| என்பது யாது? ~என்பது பெயல்ஊறு என்னும் இரண்டால் ஆனது; பெய்தலையுடையது| என்பது இதற்குப் பொருளாகும். ~நீர்ப்பெயற்று| என்பது நீரினது பெய்தலையுடையது எனப் பொருள்படும். இது கடற்கரைப் பகுதி என்று பெரும்பாணாற்றுப்படை கூறுகிறது''4. எனவே, பாடலில் குறிக்கப்பட்ட நீர் கடல் நீராய் இருத்தல் வேண்டும். கடல் நீர் கழி வழியே நிலத்துட் சென்று எப்பொழுதும் கடல் நிரைப் பெய்து கொண்டிருப்பதால், ~நீரினது பெய்தலையுடையது| என்னும் பொருளில் இந்நிலப்பகுதி ~நீர்ப்பெயற்று| என்று புலவரால் குறிக்கப்பட்டது போலும்!

"நீர்ப்பெயற்று| என்பது கடல் நீர் உட்பெய்தலைக்கொண்டதாகிய நிலம்| எனப்பொருள் படலாம்; அஃதாவது, உப்பங்கழியையுடைய நிலப்பகுதியாகும். "அந்நிலப் பகுதியான எல்லையில் (கடலோரத்தில்) துறை முகமும் பட்டினமும் இருந்தன என்பதே இங்குக் கொள்ளத் தரும் பொருளாகும்''5 இத்தகைய இடம் யாது?

மாமல்லபுரத்திற்கு இரண்டுகல் தெற்கே கடல் நீர் நிலத்துள் நுழைந்து மாமல்லபுரத்திற்குத் தென்மேற்கில் அரைக்கல் தொலைவு வரை பரவியுள்ளது மாமல்லபுரத்திற்கு மேற்கில் தொடங்கி வடக்கே மூன்று கல்தொலைவில் உள்ள சாளுவன் குப்பம் வரையில் மணல் வெளி பரவியுள்ளது. இங்ஙனம் மாமல்லபுரத்திற்க வடக்கிலும் தெற்கிலும் உள்ள மணல் வெளியை ஊடுருவிக் கொண்டே இன்றைய பக்கிங்காம்கால்வாய் செல்கிறது. இம்மணல் வெளிகள் பண்டைக் காலத்தில் கடல் நீரைப் பெற்றிருந்தமையாற்றான் இன்று மணல வெளிகளாயுள்ளன. எனவே, சங்ககாலத்தில் கடல் நீர்ப் பெய்தலையுடைய நிலமாக இப்பகுதியிருந்திருத்தல் வேண்டும் என்பது தெளிவு. ஊரார் இப்பகுதியை இன்று கழிவெளி| என்கின்றனர். இத்தகைய பகுதியின் எல்லையில் துறைமுகமும் பட்டினமும் இருந்தன என்று பெரும் பாணன் கூறியுள்ளான். ஆகவே, அவன் குறித்தவை பிற்கால மாமல்லபுரம் இருந்த பகுதியாகும்.

இங்ஙனமாயின், நீர்ப்பெயற்று| நிலத்தையடைய உப்பங்கழியைத் தாண்டுதல் வேண்டும்;. அக்கழிக்க முன்னரே மறையவர் உறைபதி இருந்திருத்தல் வேண்டும். கி.பி. ஏழாம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் (கி.பி. 630-660) வாழ்ந்த முதலாம் நரசிம்மவர்மன் இரண்டாம் புலிகேசியை வென்றமையால், தன்னை ~மகாமல்லன்| (மாமல்லன்) என்று வழங்கிக்கொண்டான். அவன் தனது நாட்டுப் பெரிய துறைமுக நகரத்தைத் திருத்தியமைத்து அதற்கு மகாமல்லபுரம்| என்றும், மல்லபுரம் என்றும், ~மாமல்லை| என்றும் ~மல்லை| என்றும் மருவி வழங்கலாயிற்று. இங்ஙனம் நரசிம்மவர்மன் ~மகாமல்லபுரம்| என்று பெயரிடுமுன்பு. அத்துறைமுக நகரம் எப்பெயர் பெற்றிருந்தது என்பதை இங்குள்ள சான்றுகளைக் கொண்டு அறிய இயலவில்லை. பெரும்பாணன் துறைமுகப் பகுதியைக்கூறி, அதனை அடுத்திருந்த பகுதியைப் ~பட்டினம்| என்று குறிப்பிட்டிருந்தலைக் காண, பிற்கால மாமல்லபுரம் இருந்த பகுதி சங்க காலத்தில் 'பட்டினம்| என வழங்கப்பட்டது என்று கருதுவதே பொருத்தமாகும்.

பெரும்பாணன், முதலிற் கடற்கரையில் உள்ள பட்டினம் செல்ல வழி கூறியுள்ளான். நிலப்படத்தை (செங்கற்பட்டு மாவட்டப் படத்தை)க் கவனித்துப் பார்த்துச் சில உண்மைகளை இங்கு அறிதல் வேண்டும். பட்டினத்திலிருந்து வடமேற்கில் ஏறத்தாழ 35கல் தொலைவில் காஞ்சியுள்ளது. பெரும்பாணன் புதிய பாணனை மிகவும் உள்நாட்டில் சந்தித்திருப்பின், அங்கிருந்து கிழக்குத் திசையில் (கடற்கரைப்) பட்டினத்திற்குச் சென்று, அங்கிருந்து வடமேற்கில் உள்ள காஞ்சிக்குச் செல்லும் படி நெடுந்தொலைவு வழியைக் கூறியிரான்.

சந்தித்த இடத்திலிருந்தே வடமேற்கிலோ, தென்மேற்கிலோ உள்ள காஞ்சிக்குப் போகும்படி வழி கூறியிருப்பான். அவன் அங்ஙனம் கூறாமை தான் புதிய பாணனைச் சந்தித்து வழி கூறச் தொடங்கிய இடம், கடற்கரைக்கு அண்மையில் இருந்திருத்தல் கூடும் என்பதை உணர்த்துகிறது. மேலும், அக்காலத்தில் அஃது செம்மையான பாதையாயும்



இருந்திருக்கலாம். கடற்கரைக்குச் சிறிது உள் தள்ளிய வழியாகப் பட்டினத்திற்கு வடமேற்கிலிருந்தும் தென் மேற்கிலிருந்தும் அப்பட்டினத்தை நோக்கி வரலாம். இந்த இரண்டுள் ஒன்றைளே பெரும் பாணன் கூறியிருத்தல் வேண்டும். அவன் பட்டினத்திற்குச் செல்லும் வழி பற்றிக்கூறிய விவரங்களை ஆராயின், அவன் கூறியது எந்த வழி என்பது புலப்படும். அவை முன்பே கூற்ப்பட்டுள்ளன.

பெரும்பாணன், முதலில் உமணர் உப்பு வண்டிகளையும் தனி மாடுகளையும் ஓட்டிச் சென்ற நெடிய வழிகளைக் கூறியுள்ளான். அவ்வழிகளில் கழுதைகளின் மீது மிளகுப் பொதிகளை ஏற்றி வாணிகம் செய்யும் வணிகரையும் அவ்வழிகளில் இருந்த சுங்கச் சாவடிகளையும் கூறியுள்ளான்; அடுத்து நாடு காவல் செய்யும்விற்படை வீரர் ஊர்களையும் காடுகளையும் குறித்துள்ளான்.

அவன் கூறிய இடத்திலிருந்து பட்டினம் நோக்கிச் செல்லும் வழி (கூர்ந்து படித்துப் பார்ப்பின்) நெய்தல்-பாலை-முல்லை-முருதம். மீண்டும் நெய்தல் என்னும் முறையில் அமைந்துள்ளதைக் காணலாம். அம்முறையிற் செல்லின், முதல் உமணர் உப்பு வண்டிகள் செல்லும் நெடிய வழிகளைக் காணலாம். உமணருடைய உப்பு வண்டிகள் உப்பளங்களிலிருந்தே உப்பை ஏற்றிக்கொண்டு செல்லும். எனவே, பெரும்பாணன் பயணம் தொங்கும் இடத்திற்கு அருகில் பெரும்பாலும் உப்பளங்கள் இருந்திருக்கலாம். அங்கிருந்து உப்பு வணிகர் உப்பை வண்டிகளில் ஏற்றி உள்நாடு நோக்கிச் செல்லுதல் வழக்கம். உல்கு| என்பது ~சுங்கம்| எனப்பொருள்படும். அது கடல் வழியே இறக்குமதியாகும் பொருள்களுக்கு விதிக்கப்பட்ட வரியாகும். இவ்வரியை வாங்கும் ஆயத்துறைகள் கடற்கரையை அடுத்தே இருத்தல் வழக்கம் என்பதை அறியப் பெரும்பாணன் கடற்கரைக்கு அணித்தான வழியையே கூறினான் என்பதே பொருத்தமாகும்.

அத்தகைய உப்பளங்கள் மேற்கூறப்பட்ட பட்டினத்திற்கு வடக்கில் கடற்கரைப் பகுதியில் கோவளம், கேளம்பாக்கம் பகுதிகளில் இன்றுள்ளன. ஆயின், “பண்டைக்காலத்தில் இருந்தமைக்குக் கல்வெட்டுகளிற் சான்றில்லை. செய்யூர், சூணாம்பேடு என்னும் இடங்களில் உப்பளங்கள் மிகுதியாகும் செய்யூர் உப்பளங்கள் சோழர் காலத்திலும், பெயர் பெற்றவை”.6 இவ்வுப்பளங்கள் சங்க காலத்திலும் இருந்திருக்கலாம் என்று கருதுதல் பொருத்தமாகும்.

நாடுகாவல் செய்யும் விற்படைவீரர் ஊர்கள் வழியில் இருந்தன. அவற்றையடுத்துக் காடுகள் இருந்தன.




**மலைகளில் இருந்து வெட்டி எடுக்கப்படும் உப்புகளை, சுத்தீகரிக்கும் ஆஸ்திரிய பழங்குடிகள்**

காடுகளுக்கு அப்பால் பாலை நிலம்-பாலை நிலத்தில் முயல், பன்றி வாழும் துறுகள் இருந்தன. அவற்றுக்கப்பால் வேட்டுவர் அரண்கள் இருந்தன. அவற்றைக் கடந்து இடையர் வாழ்ந்த முல்லை நிலப்பகுதி இருந்தது. அப்பால் வளம் மிகுந்த மருதநிலம் இருந்தது.

இவ்விவரங்கள் நினைவிற்கொண்டு உப்பளங்கள் மிகுந்த செய்யூருக்கு வடக்கில் இன்றுள்ள ஊர்ப்பெயர்களைக் காண்பது நலம் பயக்கும். வேட்டைக்காரக் குப்பம், செங்காட்டூர், பாலூர் (பாலையூர்) தொண்டைமான் சின்னத் தொண்டைமான் நல்லூர் நல்லாற்றூர் (மருதநல்லூர், நிலம்) ஆயப்பாக்கமும் அவற்றின் பொருளும் காணத்தக்கவை. கதிரவாசகன் பட்டினம் என்ற சதுரங்கப் பட்டினத்திற்கும் மாமல்லபுரத்திற்கும் இடையில் மிகப்பல ஏரிகளும் குளங்களும் இருத்தல் காணலாம். குளங்களிலும் ஏரிகளிலும் பூத்த மலர்களை மக்கள் பறிப்பார்கள். நீங்கள் அவற்றைச் சூடிச் செல்லுங்கள் என்று பெரும்பாணன் புதிய பாணனுக்குக் கூறினான் அல்லனோ? அந்நீர் நிலைகள் இவையாயிருத்தல் கூடும்.

இவற்றுக்கப்பால் மறையவர் உறைபதி இருந்ததாகப் பெரும்பாணன் கூறியுள்ளான். மாமல்லபுரத்திற்குச் சிறிது மேற்கில் கழிவெளிக்கப்பால் பூஞ்சேரி என்னும் சிற்றூர் இருக்கிறது. அது மிகப் பழைய காலத்தில் பிராமணர் ஊராய் இருந்ததென்று தம் முன்னோர் கூறியதாக இன்று அவ்வூரில் உள்ள முதியவர் கூறுகின்றனர். முதற் சடையவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் (கி.பி. 1266இல்) “மாமல்லபுரத்துப் பெருமாள் கோவில் பட்டர்கள் அய்யனங்ககாரச் சதுர்வேதி மங்கலத்தில் வாழ்ந்தனர் என்று மாமல்லபுரத்துக் கல்வெட்டொன்று தெரிவிக்கிறது”.7 மாமல்லபுரத்துப் பெருமாள் கோவில் பட்டர்கள் வாழ்ந்த அவ்வூர் மாமல்லபுரத்திற்கு மிகு அண்மையில் இருந்திருத்தல் வேண்டும். இன்று இப்பெயருடன் ஓர் ஊரும் மாமல்ல புரததிற்கு அண்மையில் இல்லை. அது காலப்போக்கில் அழிந்து போயிருக்கலாம். இங்ஙனமே கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் இருந்ததெனப் பெரும்பாணன் கூறிய மறையவர் உறைபதியும் காலப்போக்கில் அழிந்திருக்கலாம்.

பெரும்பாணன் கூறியுள்ள வழிபற்றிய விவரங்களையும் மதுராந்தகம் செங்கற்பட்டு வட்டங்களின் கடலோரப் பகுதியில் உள்ள ஊர்களின் பெயர்களையும் அவ்வூர்கள் பற்றிய விவரங்களையும் ஒத்திட்டுக் காண்கையில், பெருமபாணன் செய்யூருக்குத் தெற்கிலோ சிறிது தள்ளித் தென்மேற்கிலோ இருந்த புதிய பாணனுக்கு வழி கூறியிருத்தல் வேண்டும்.

# காஞ்சி தான்தோன்றீஸ்வரர் கோயில்

## அரிய சிற்பக் காட்சிகளைக் கொண்டுள்ள கோயில்

காஞ்சி. ரேவஜி



மத்த விலாச பிரகஸ்தனம் மகேந்திர வர்ம பல்லவனால் இயற்றப்பட்டது. மகேந்திர வர்ம பல்லவன் ஒரு புலவனாகவும், கதையின் ஆசிரியராகவும் பல்லவர்களின் சமூகம் மற்றும் கலாச்சாரம் சார்ந்த பல தகவல்களை இந்த கதையின் வழியே கூறுவதை நாம் பார்க்கிறோம். இந்த கதையில் அவரின் மொழி ஆளுமையை நம்மால் புரிந்து கொள்ள முடிகிறது. கதையில் வரும் கபாலிகன் சமஸ்கிருதமும், வணிகமும், தேவசோமாகவும் பிராகிருத்தமும் பேசுவதாக குறிப்பிடப்பட்டுள்ளது. இன்னும் இந்த மொழியில் பல்வேறு வகைகளையும் இந்த கதை பேசுவதாக குறிப்புகள் உள்ளது.

மத்தவ விலாசம் பற்றிய கதையை சிற்பங்கள் வாயிலாக நம்மால் தான்தோன்றீஸ்வரர் கோவில் சுற்று சுவரில் காண முடியும. இதன் கதை சத்தியசோமா மற்றும் தேவசோமா என்ற இரு கபாலிகர்கள் குடிபோதையில் காஞ்சி மாநகர வீதியின் மது கடைகளில்தடுமாறுவதில் ஆரம்பிக்கிறது. அவர்களின் போதை சத்தியசோமா, தன் மனைவியின் பெயரைக் கூட சரியாக உச்சரிக்காத வகையில் இருக்கிறது. அதன் காரணமாக இனிமேல் குடிக்க போவதில்லை என இருவரும் பேசிக் கொள்கிறார்கள். அவர்களின் புனிதமான தானயோட்டு கிண்ணத்தை காணாமல் தேடி அதை எங்கோ தொலைத்து விட்டோமோ, அல்லது யாராவது திருட்டு விட்டார்களோ என்ற எண்ண ஓட்டத்துடன் கதை நகர்கிறது. தேடப் போன இடத்தில் காஞ்சி மாநகரின் சிறப்பை பற்றி பேசிக்கொண்டே, ஒரு மதுக்கடையில் நுழைகிறார்கள். கடையில் மது வழங்கப்படுகிறது,

ஒருவர் தரும் பொருள் நிராகரிப்பது சரியானது அல்ல என முடிவெடுத்து இருவரும் மீண்டும் மது குடிக்க எண்ணுகிறார்கள். ஆனால் தான ஒடு இல்லாத காரணத்தினால், மாட்டின் கொம்பில் மதுவை வாங்கி அருந்துகின்றனர்.

அவர்களின் எதிரில் வரும் புத்த துறவியான நாகசேனா அதை திருடு விட்டார் என குற்றம் சாட்டுகிறார்கள். இவர்களுக்கு இடையில் நடக்கும் சம்பாஷணைகளும், விளக்கங்களும் பல்லவர் காலகட்டத்தில் இருந்த பல சமூக கருத்துக்களை நமக்கு பகிர்கிறது. இருவரும் அந்த தான ஓட்டை பிடுங்குவதில் சண்டை போட்டுக்கொண்டும், குடிபோதையிலும் இருந்ததாலும் ஓட்டை பிடுங்க முடியாமல் கீழே விழுந்து விடுகிறார்கள்.



ஒரு பாசுபத வணிகர் இவர்களுக்கு மத்தியஸ்தம்





செய்ய கதையில் நுழைகிறார். இறுதியில் புத்த துறவி அவருடைய தான ஓட்டை காண்பித்ததும் இருவரும் அது வேறு வண்ணத்திலும் வேறு அளவிலும் இருப்பதை கண்டு இது அவர்களுடையது இல்லை என்று புரிந்து கொள்கிறார்கள். ஆனாலும் இருவரும் குடிபோதையில் நடனமாடுகையில் புத்த துறவியோ அவசியமில்லாமல் என் மீது குற்றம் சாட்டியதற்காக இவர்கள் வருந்த வேண்டுமே, தவிர நடனம் ஆடுவதில் எந்த அர்த்தமும் இல்லை என கூறுகிறார். மீண்டும் இருவரும் ஒரு வேளை, நீ அதன் வண்ணத்தை மாற்றி அளவையும் மாற்றி இருக்கலாம் என குற்றம் சாட்டுகிறார்கள்.

அதன் பிறகு வணிகரால் ஒரு இறுதி முடிவுக்கு வர முடியாத காரணத்தினால், இந்த வழக்கை சான்றோர்கள் முன்னிலையில் மன்றத்தில் வைத்துக் கொள்ளலாம் என பேசுகிறார்கள். ஆனால் தேவ சோமாவோ புத்த துறவி, தன்னிடம் உள்ள பணத்தை



கொண்டு மன்றத்தில் உள்ள நீதிபதிகளுக்கு லஞ்சம் கொடுத்து எங்களை தோற்கடித்து விடுவார் என கூறுகிறார். இறுதியில் ஒரு பைத்தியக்காரன் அந்த மண்டை ஓட்டு கிண்ணத்துடன் வந்து அதை ஒரு நாயிடம் இருந்து மீட்டதாக கூறுகிறான். அது மீண்டும் சத்தியசோமாவிடம் சேர்கிறது இது கதை சுருக்கம்.

இந்த கதையின் வழியே காஞ்சி மாநகரத்தில் மகேந்திர வர்ம பல்லவன் காலகட்டத்தில் பலவகையான சமயங்களில் இருந்தது குறித்து நம்மால் அறிய முடிகிறது. மக்களை பற்றியும், அவர்களின் வாழ்வியல் முறை பற்றியும் பல குறிப்புகள் இந்த சிறுகதையில் குறிக்கப்பட்டு இருக்கிறது.

நாம் சுவற்றில் காணும் சிற்பங்களில் இருந்து முதலில் அந்த காபாலிகர்கள், மது குடுவையை கையில் வைத்துக்கொண்டு தடுமாறியபடி நடந்து வருவதை போன்ற சிற்பம் அமைக்கப்பட்டுள்ளது. அடுத்தபடியாக அவர்கள் இருவரும் அவர்களின் மண்டை ஓட்டையை காணாது தேடுவது போலவும்





அடுத்த சிற்ப தொகுதி அமைக்கப்பட்டுள்ளது.

அவர்கள் இருவரும் புத்த துறவியிடம் சண்டைக்கு செல்கிறார்கள். வாய்ச்சண்டையாக இருந்த சண்டை முற்றி, கைகலப்பாக மாறும் வரையில் இந்த நிகழ்வு காண முடிகிறது. தான் திருடவில்லை என்ற புத்ததுறவியும், நீதான் எடுத்திருக்கிறாய் என்பது போன்ற பாவணையில் சத்தியசோமாவும் தடுத்து நிறுத்தும் இடத்தில் தேவசோமாவும், அவர்களுக்கு பின்னால் ஒருவர் நிற்பதை போன்று சிற்பம் அமைக்கப்பட்டுள்ளது.

இக்கோவிலில் உள்ள சிற்ப காட்சிகளில் காஞ்சிபுரத்தில் நடந்த புனைவு நிகழ்வாக எழுதப்பட்ட பல்லவர்கால, மத்தவிலாச கதையோடு ஒத்துப்போவதால், இச்சிற்பங்கள் அதன் தழுவல் எனக் கருதத் தோன்றுகிறது. இருப்பினும் வேறு சில சிற்பங்களுக்கான கதைப் பொருள் இன்றும் அறியக் கூடவில்லை. உறுதியான தகவல்கள் கிடைக்கும் கற்பனைக் காட்சிகளை இதனுடன் பொறுத்திப் பார்த்து மகிழலாம். அடுத்த முறை காஞ்சிபுரம் செல்லும் பொழுது இந்த கோவிலை மறக்காது பார்த்துவிட்டு வாருங்கள்.

# சங்க இலக்கியமும், செயற்கை நுண்ணறிவும்.

## Ar. வித்யா இலட்சுமி ராஜசேகர்



சங்க இலக்கியங்கள் குறித்து பலவிதமான ஆராய்ச்சிகளும், கலை சார்ந்த படைப்புகளும் பல காலமாக வெளிவந்து கொண்டே இருக்கிறது. அதில் செயற்கை நுண்ணறிவின் மூலமாக பல படைப்புகள் நம்மால் பார்க்க முடிகிறது. ஒரு சிறிய முயற்சியாக குறுந்தொகையிலிருந்து சில பாடல்களை எடுத்து அதற்கு செயற்கை நுண்ணறிவின் மூலம் படங்களை உருவாக்க சிறிய முயற்சியை மேற்கொண்டுள்ளோம்..

இன்ன ளாயினள் நன்னுதல் என்றவர்த்
துன்னச் சென்று செப்புநர்ப் பெறினே
நன்றுமன் வாழி தோழிநம் படப்பை
நீர்வார் பைம்புதற் கலித்த
மாரிப் பீரத் தலர்சில கொண்டே.

இந்தப் பாடல் தலைவி தோழியிடம் தன் வருத்தத்தை தெரிவிக்கும் வகையில் எழுதப்பட்டிருக்கிறது. தலைவி தோழியிடம் நம் வீட்டு தோட்டத்தில் பீர்க்க பசும் புதர்கள் நன்றாக வளர்ந்த தழைத்திருக்கிறது. மழைக்காலத்தில் அதன்



மலர்கள் மலர்ந்திருக்கும். அவற்றை தலைவனிடம் எடுத்துச் சென்று, அழகிய நெற்றி உடையவளாக இருக்கும் தலைவி இப்பொழுது இந்த பூக்களின் நிறத்தை பெற்றிருக்கிறாள் என்று யாராவது கூறினால் நன்றாக இருக்கும். ஆனால் அப்படி யாரும் இல்லையே என்று வருத்தத்துடன் தெரிவிக்கிறாள்.

*2.*இருள்திணிந் தன்ன ஈர்ந்தண் கொழுநிழல்
நிலவுக்குவித் தன்ன வெண்மணல் ஒருசிறைக்
கருங்கோட்டுப் புன்னைப் பூம்பொழில் புலம்ப
இன்னும் வாரார் வரூஉம்
பன்மீன் வேட்டத் தென்னையர் திமிலே.

தலைவியைக் காண குறிப்பிட்ட இடத்திற்கு வந்த தலைவன், ஒளிந்து நின்று தலைவி தன்னை தேடுவதை காண நினைக்கிறான். ஆனால் தலைவன் அங்கே நிற்பதை தோழி பார்த்துவிட்டு, இங்கு வந்து பார்ப்பதாய் சொன்ன தலைவன் இன்னும் வரவில்லை, இந்த சோலையும் தனியாக இருக்கிறது. நாமும் தனியாக இருக்கிறோம், நேரம் கழிந்து கொண்டிருக்கிறது. மீன் பிடிப்பதற்காக கடலுக்குள் சென்ற தமையன்களின் படகு, கரையை நோக்கி வந்து கொண்டிருக்கிறது என்று கூறுகிறாள். நினைத்த தலைவன் தமையன்கள் வந்துவிட்டால் தலைவியை காண முடியாது என்று ஏமாற்றம் அடைகிறான். இந்த பாடலில் சோலையின் அழகை விரித்து கூறிய விதம் இயற்கை பின்னணியை பற்றிய குறிப்பாக எடுத்துக் கொள்ள வேண்டும்.

*3.*ஆடமை புரையும் வனப்பிற் பணைத்தோள்

பேரமர்க் கண்ணி யிருந்த ஊரே
நெடுஞ்சேண் ஆரிடை யதுவே நெஞ்சே
ஈரம் பட்ட செவ்விப் பைம்புனத்து
ஓரேர் உழவன் போலப்
பெருவிதுப் புற்றன்றால் நோகோ யானே.

தலைவன் தலைவியை பிரிந்து நீண்ட நாட்கள் ஆன நிலையில் தலைவியை சென்று காண முடியாதபடி நெடுந்தொலைவில் உள்ளான். ஆனால் அவன் உள்ளமோ தலைவியைக் காண மிகுந்த ஆவல் கொண்டிருக்கிறது. இதை மழை பெய்து முடித்த பிறகு ஒரு உழவன் தன் ஈர நிலத்தை உழுது முடிக்க வேண்டிய சூழலிலும், அதே நேரத்தில் ஒரே ஒரு ஏரை மட்டுமே உடையவனாக பெருந்தவிப்பில் இருப்பதற்கான நிலையை விவரிக்கிறது. இதில் தலைவன் தன்னை உழவனாக ஒப்புமைப்படுத்தி கூறுவதாக உள்ளது.

4.யாரணங் குற்றனை கடலே பூழியர்
சிறுதலை வெள்ளைத் தோடுபரந் தன்ன
மீனார் குருகின் கானலம் பெருந்துறை
வெள்வீத் தாழை திரையலை
நள்ளென் கங்குலுங் கேட்குநின் குரலே.

தலைவனை பிரிந்து தனிமையில் இருக்கும் தலைவி கடலைப் பார்த்து கடலே இந்த நேரத்தில், புலம்புகிறாயே யாரால் நீ துன்பமடைந்தாய்? . மீன்களை உண்ணும் கொக்கு கூட்டம் பரவி இருக்கும் கடற்கரையில், சோலைகள் சூழ்ந்த பெரிய துறையில் தாழை மரங்கள் நிறைந்த சோலையில் மோதி பெரும் சத்தம் உருவாக்குகிறாயே யாரால் இந்த துயரம் அடைந்தாய் என கேட்கிறாள்.





இந்தப் பாடலில் வரி ஓயாமல் அலை கழிக்கப்பட்டு கொண்டிருக்கும் கடலை போல தலைவியும் தலைவனால் அலைகழிக்கப்படுவதாக குறிப்பால் உணர்த்துகிறாள்.

5.முளி தயிர் பிசைந்த காந்தல் மென்விரல்
கழுவுறு கலிங்கம் கழா அது உடீ இ
குவளை உண்கண் குய்ப்புகை கழுமத்
தான் துழந்து அட்ட தீம் புளிப்பாகர்
இனிது என கணவன் உண்டலின்
நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே

தலைவனை மணந்து கொண்டு அவன் வீட்டிற்குச் சென்று தலைவியைக் காண செவிலித்தாய் சென்று வருகிறாள். அவள் தாயிடம் தலைவி இல்லறம் நடத்தும் அழகை எடுத்துக் கூறியதாக இந்த பாடல் வருகிறது. அவள் தாயிடம், நன்றாக கெட்டித் தயிரை தன் கைகளால் பிசைந்தாள். அப்படியே எழுந்து தாளிப்பதற்காக சென்றாள், தன் ஆடை நெகிழ்ந்த போது கையை கழுவாமல் அதை சரி செய்து கொண்டு வேலையை கவனித்தாள். தாளித்த பொழுது எழுந்த புகையால் அவள் கண்களில் நீர் நிறைந்தது இப்படி அவள் சமைத்த புளிகுழம்பை அவள் கணவன் இனிதாக இருக்கிறது என்று கூறிய பொழுது, அவள் முகம் மகிழ்ச்சியாக காணப்பட்டது என தாயிடம் விவரித்தாள்□

6 திண்டேர் நள்ளி கானத் தண்டர்
பல்லாப் பயந்த நெய்யிற் றொண்டி
முழுதுடன் விளைந்த வெண்ணெல் வெஞ்சோ
றெழுகலத் தேந்தினுஞ் சிறிதென் றோழி
பெருந்தோ ணெகிழ்த்த செல்லற்கு

விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே.

தலைவியை பிரிந்து மீண்டும் வந்த தலைவன் தோழியை பார்த்து நான் வரும்வரை தலைவியை ஆற்றி இருக்க செய்ததற்கு நன்றி என்று கூறுகிறான். ஆனால் தோழியோ தினமும் யாரோ விருந்தினர் வரப்போகிறார்கள் என்று தலைவிக்கு கரைந்து தெரிவித்த காக்கைகளுக்கு நன்றி சொல்லுங்கள் என்னும் விதமாக இந்த பாடல் எழுதப்பட்டிருக்கிறது.

தோழி'' உன்னுடைய நன்றியை அவளை ஆற்றி இருக்க செய்த காக்கைக்கு கூற வேண்டும். நள்ளி என்ற வள்ளலின் காட்டில் வாழும் இடையர்கள் வளமான பசுக்களை வைத்திருக்கிறார்கள். அப்பசுக்களின் நெய்யை மொத்தமாக எடுத்துக்கொண்டு, தொண்டி எனும் ஊரில் விளைந்த நெல்லரிசியை கொண்டு சமைத்த சோற்றில் நெய்யை கலந்து ஏழு கலங்களில் வைத்து தினமும் காக்கைகளுக்கு ஊட்டினாலும், அந்த படையல் காக்கையின் நன்றிக்கு ஈடாகாது என கூறுகிறாள். காக்கை கரைந்தது தலைவியின் நம்பிக்கையை சுட்டுகிறது. மேலும் இப்பாடலின் வழி இந்நிலத்தில் இருந்த இனக்குழுக்கள் பற்றியும், அவர்களின் பசு வளர்ப்பையும், விவசாயம் பற்றிய செய்திகளையும் நாம் அறிந்து கொள்ள முடிகிறது.



# ஐரோப்பியர் கால கடலூர் பற்றிய நூல்

## நூல் அறிமுகம்




சோழமண்டலக் கடற்கரையில் மையப்பகுதியில் அமைந்துள்ள துறைமுகப்பட்டினம் கடலூர் ஒரு வரலாற்று சிறப்புமிக்க நகரமாகும். கடலூரின் புவியியல் அமைப்பு, கடலூரின் வேறு பெயர்கள், அதன் அமைவிடம், கடலூரில் ஐரோப்பியர்களின் துணிவணிகம், வணிக நடவடிக்கைகள், கடல் வணிகம் போர்ச்சுகீசியர்களால் சீரமைக்கப்பட்ட கடலூர் போன்ற பல வரலாற்று தகவல்களை உள்ளடக்கியது இந்நூல். சோழமண்டல கடற்கரையில் ஆங்கிலேயர்களின் கடல் வாணிபம் 1681 முதல் 1947 - கடலூர் நகரமயமாதல் ஒரு ஆய்வு. பேரா. கு. கன்னையா

சோழமண்ட கடற்கரையில் ஐரோப்பியர்கள் கடலூர் ஆங்கிலேயர் வசமாதல், அரசும் நிர்வாகமும், நகரமயமாதல், நகராட்சி நிர்வாகம் நகரமயமாதல், 20 ஆம் நூற்றாண்டின் உட்பகுதியில் கடலூரின் நகர வளர்ச்சி, சமுதாய கட்டமைப்பு மாற்றங்கள், என பல தலைப்புகள் கடலூரின் வரலாற்றை பற்றி கூறுகின்றது. கடலூர் பகுதியில் நிலவியல் அமைப்பு இயற்கை வளம் தொழில்கள் ஐரோப்பியரின் வருவியால் கடல் வாணிபத்தின் பெருக்கம் அதனால் ஏற்பட்ட மாற்றங்கள் என தொடங்கும் என்னுள் சுமார் 250 கால கடலூரின் பல்துறை வணிகம் நகரம் சமுதாயம் ஆகியவற்றை ஏற்பட்ட மாற்றங்களையும் பொருளாதார முன்னேற்றத்தையும் வளர்ச்சி ஆராய்கிறது

பதினாறாம் நூற்றாண்டில் இருந்து டச்சி பேர்ச்சுக்கீசியர் தொடர்ந்து ஆங்கிலேயர்கள் கடற் பகுதியில், வணிக மையங்களை அமைத்து வணிகம் செய்த விபரங்கள், அவர்களுக்குள்ளும் ஏற்பட்ட போட்டிகள் உள்ளூர் அரசியல் ஏற்பட்ட தாக்கங்கள், கடலூரில் இருந்த கோட்டை கொத்தளங்கள், நவீனமான துறைமுகங்களாகிய உருவான செய்திகளை பற்றி இது கூறுகின்றது. ஆங்கிலேயர்கள் 1291 சின்னையா சிட்டி என்ற வணிகருக்கு சொந்தமான அரண்மனையுடன் கூடிய தேவனாம்பட்டினம் கிராமத்தை விலைக்கு வாங்கினார். இந்த கிராமத்தின் மூன்று திசைகளிலும் இருந்து பீரங்கி குண்டுகளால் சுட்டு அந்த குண்டுகள் எங்கு போய் விழுந்தனவோ அந்த இடங்களை, தங்களுடைய புதிய நகருக்குள் இணைத்துக் கொண்டனர். அதுவே இன்றைய கடலூர் நகர் பகுதியில் ஆகும். குண்டு விழுந்த இடங்கள் குண்டு கிராமங்கள் என பெயர் பெற்றன. எடுத்துக்காட்டாக குண்டு சாலை, குண்டு உப்பளவாடி ஆகிய கிராமங்களை நாம் குறிப்பிடலாம்.

இவ்வாறு இவர்கள் வந்து குண்டு போட்டு எல்லையை பிரித்தபோது அது சில டச்சுக்காரர்களின் ஊர்களிலும் போய் விழுந்தன. இதனால் டச்சுக்காரர்களுக்கும் ஆங்கிலேயருக்கு இடையே பிரச்சினை வந்தது. இதனை அறிந்த செஞ்சி மன்னர் இந்த விஷயத்தில் தலையிட்டார். வட இந்தியாவில் பழங்குடிகள் அம்புகளை எய்து அது விழும் இடத்தில் தங்களது எல்லைகளாக வரையறுத்துக் கொண்டனர். அதே முறையை பின்பற்றி நாங்கள் பீரங்கி குண்டு பயன்படுத்தி எங்கள் எல்லையை வரையறுத்துக் கொண்டோம் என்று தங்கள் உரிமையை நிலைநாட்டினர். இதனால் மஞ்சள் குப்பத்தில் செயல்பட்டு வந்த டச்சுக்காரர்கள் அந்த கிராமத்தை விட்டு வெளியேறினார்.



நிலவளம் பெருகியதால் தொழில் பன்னாட்டு தொடர்பினால் வணிகம், வணிக ஏற்றுமதி பெருகியது. இதன் மூலம் சமுதாயத்திலும் பல நல்ல நிலைக்கு வந்தனர். இருப்பினும் சமுதாயமானது சமயம் தொழில் சாதி மற்றும் சமூக அந்தஸ்து என்ற அடிப்படையில் மூன்று பகுதிகளாக அன்று பிரிந்து இருந்தது. வலங்கை சாதியினர் இடங்கை சாதியினர் மற்றும் நடுவிற் சாதியினர் போன்ற பிரிவுகள் இருந்தன. இவைகள் கிடையே நடந்த மோதல்களை பற்றி இந்த நூல் தெளிவாக பேசுகின்றது.

இவர்கள் பிரிந்து ஒருவருக்கொருவர் சண்டை போட்டுக் கொண்டதும், அதே நேரத்தில் போட்டி போட்டுக் கொண்டு எவ்வாறு சமுதாயப் பணி ஆற்றினார் என்றும் இந்த புத்தகத்தில் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

மேலும் ஆங்கிலேயர்கள் கடலூர் நகரை விலைக்கு வாங்கிய பிறகு, அதன் நகர வளர்ச்சியில் முனைப்புடன் செயல்பட்டனர். அடிக்கடி மழைப் புயலால் பாதிக்கப்பட்ட கடலூரில் வானிலை மையங்களை அமைத்தனர். தபால் தந்தி போன்றவற்றை விரிவாக்கினார் சாலைகளையும் தெருகளையும் விரிவாக்கம் செய்தனர். இதன் மூலம் வணிகமானது எளிதில் நடைபெற்றது அதேபோல உள்ளூர் ஆட்சி அமைப்பை தங்களுக்கு ஏற்றவாறு மாற்றி அமைத்துக் கொண்டனர்.

கடலூரில் ஆங்கிலேயர்கள் தங்கி இருந்த பகுதி வெள்ளைய நகரம் என்றும் இந்தியர்கள் தங்கி இருந்த பகுதி கருப்பர் நகரம் இந்து நகரம் அல்லது ஜண்டு நகரம் என்றும் அழைக்க அழைக்கப்பட்டது.

கடலூர் நகரமயமாதல் என்ற இந்த புத்தகம் நம்மை 17 ஆம் நூற்றாண்டில் ஐரோப்பியர் கால வாழ்க்கைக்கு விட்டு செல்லும் என்பதில் ஐயமில்லை. ஐரோப்பியர் மற்றவரை சேர்த்துக்கொண்டு, தமக்குள் நடத்தியது உலகப் போர்கள் என்றால்

இந்திய துணைக்கண்டத்தில் பிரஞ்சு, ஸ்பெயின், டச்சு, போர்ச்சுக்கீசியர், ஜெர்மானியர், ஆங்கிலேயர் மோதிக்கொண்டதும், உலகப்போரின் முன்னோட்டம் எனக் கருதலாம். இதில் ஐரோப்பியர் சார்பாக பல்வேறு, இந்திய அரசுகள் தங்களுக்குள் மோதிக்கொண்டன.

படம்: கடலூர் போர் ஆங்கிலேயருக்கும் பிரஞ்சு படைகளுக்கும் நடைப்பெற்ற மிகப்பெரிய கடல் யுத்தம்.

*நூல்: சோழமண்டல கடற்கரையில் ஆங்கிலேயர்களின் கடல் வாணிபம் 1681 முதல் 1947 - கடலூர் நகரமயமாதல் ஒரு ஆய்வு. பேரா. கு. கன்னையா*

*விலை: ரூ. 390*

*Buy Online: [https://www.heritager.in/shop/sozha-mandala-kadark-araiyil-aangileyar-kadal-vaanibam/](https://www.heritager.in/shop/sozha-mandala-kadark-araiyil-aangileyar-kadal-vaanibam/)*

